Annamalai University Isai Tamil Series-Vol. XIX.

# தமிழிசைப் பாடல்கள்

பத்தொன்பதாம் தொகுதி

## திருப்புகழ்

சுர தாளக் குறிப்புடன்




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1952

Annamalai University Isai Tamil Series - Vol. XIX

# தமிழிசைப் பாடல்கள்

பத்தொன்பதாம் தொகுதி

## திருப்புகழ்

சுர தாளக் குறிப்புடன்




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1952

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து இசைத்தமிழ் வெளியீடு XIX

# திருப்புகழ்

## சுர தாளக் குறிப்புடன்

*இசைப்படுத்தியவர் :*

*காஞ்சிபுரம்*

**இசைப் பெரும் புலவர், நாயனாப் பிள்ளை அவர்கள்**

*பாடிய முறைப்படி*

**இசைப் பேராசிரியர்,**

**இசைமன்னர், திரு. சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்**

*சுர தாளக் குறிப்பெழுதிப் பரிசோதித்தவர் :*

**இசை ஆசிரியர்,**

**திரு. ப. வைத்திலிங்கம் பிள்ளை அவர்கள்**

*சரித்திரக் குறிப்பு எழுதிப் பரிசோதித்தவர் :*

**வித்துவான்,**

**திரு. க. வெள்ளைவாரணனாரவர்கள்**




**அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாரால்**

திருச்சிராப்பள்ளி, சிட்டி அச்சகத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

*1952*

# உள்ளுறை

மகாமகோபாத்தியாய பண்டிதமணி

**திரு. மு. கதிரேசச் செட்டியாரவர்கள்**

**இயற்றியவை**

## கடவுள் வாழ்த்து

---

**ஆசிரிய விருத்தம்**

பூவார் மணம்போல் உலகமெலாம்
பொருந்தி யியக்கும் பெரும்பொருளே
புனிதம் நிறைந்த வுணர்வுடையோர்
புகழிற் கிடக்கும் புண்ணியனே

நாவார் கலைகள் துணிபொருளா
நவில்நா யகனே மெய்யுணர்வின்
நலமார் வடிவே யகவிருளை
நலிந்து விளங்கி நல்லன்பர்

தூவார் உளத்திற் சுடர்விளக்கே
துகளற் றொடுங்கித் தமைமறந்து
துய்ப்பார்க் கினிய செழுந்தேனே
தோன்றாத் துணையே அறுவரெனும்

மேவார் தமைச்செற் றுளந்தெளிந்தோர்
வினைமா சறுக்கும் மெய்ப்பொருளே
விரும்பிப் பணியும் எம்மையருள்
வெள்ளத் திமைத்துக் காத்தருளே.

---

## அண்ணாமலைப் பல்கலைக்கழக வாழ்த்து

---

**கட்டளைக் கலித்துறை**

கண்ணார் மணியிற் புரப்போ ரெனும்பொருட் கார்பொழிந்த
தண்ணார் நிதிநீர்ச் செழிப்பிற் கலைப்பயிர் தான்வளர்க்கும்
அண்ணா மலைப்பல் கலைக்கழ கப்பே ரணிநிலையம்
விண்ணார் புகழொடு நாளுநா ளோங்கி விளங்குகவே.

---



அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நிறுவிய செட்டிநாட்டரசர்

**டாக்டர் ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார்**

## உருவச்சிறப்பு

ஊக்கம் உறுதி உணர்ச்சி யருஞ்செயலின்
ஆக்கம் அறம்புகழன் பாண்மைமுதல்—நீக்கமறக்
காண்டற் கமைந்த கவினுரு அண்ணுமலைமன்
ஆண்டகையின் நல்லுருவ மாம்.

## வாழ்த்து

சீர்மலி கொடையால் அறிவினுல் ஆற்றுஞ்
செயற்கருஞ் செயலினுல் உலகிற்
பேர்மலி புகழாற் பல்கலைக் கழகம்
நிறுவிய பெருமையாற் சிறந்தோன்
ஏர்மலி தருநல் இசைத்தமிழ் வளர்க்கும்
ஏந்தல்நம் செட்டிநாட் டரசாம்
நார்மலி யுளத்தண் ணுமலை வள்ளல்
நலமுற நீடுவா ழியவே.

மகாமகோபாத்தியாய-பண்டிதமணி
**மு. கதிரேசச் செட்டியார்**



அண்ணாமலைப் பல்கலைக் கழகப் புரோ சான்சலர்
செட்டிநாட்டரசர்

**ராஜா சர் முத்தையா செட்டியார்**

# ஆசிமொழிகள்

---

*திருப்புகழ்மணி*

**டி. எம். கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள்**

*போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பு முள்ளும்*
*வாக்கும் வடிவுமுடிவு மில்லாதொன் று வந்து வந்து*
*தாக்கு மனோலயந்தானே தருமெனைத் தன் வசத்தே*
*ஆக்கும் அறுமுகவா சொல்லொணாதிந்த ஆனந்தமே !*

—கந்தரலங்காரம் - 73.

*திருப்புகழ் பாடுந் தொண்டர்கள் இந்தப் பாட்டின் அனுபூதியை அடிக்கடி உணரப்பெறுவார்கள். மனோலயம் கொடுக்கக்கூடிய நூலை இறைவன் அருளால் திருப்புகழ் எனப் பெரும் பாக்கியமாய் உலகம் பெற்றது. மனோலயத்தில் அடங்கியதே மற்ற எல்லா லயங்களும். சொல்லின் லயமும் (தண்ணென் றொழுக்கம் என்றார் கம்பர்), பொருளின் லயமும், பண்ணின் லயமும், சந்தத்தின் லயமும் (தாள லயம்) எல்லா லயமும் ஏற்படினும், மக்களின் முயற்சிகளிலும் செயல்களிலும் தான், நான் எனும் உணர்ச்சி அழியாமல் ஒருமைப்பாட்டுடன் நிற்பதேயன்றி மனமும் அதன் கூர்மையும் பகுத்தறிவும், சற்றும் குறையாது பிரியாது நிற்கும். ஆனால் திருப்புகழிலோ, பாடுகின்ற பக்தன் மனமும் லயப்பட்டு, தாக்கும் ஆனந்தத்தில் கரைந்து விடுகின்றது. இப்படி 'தன்னை மறந்தழுவார்' பாட்டின் பெருமையை உலகத்தவர் உணர, இந்த வெளியீடு மிகுந்த உதவியாகும்.*

*திருப்புகழில் பொருட்கோலமாய் விளங்குகின்றான் முருகன். "பண்ணாகிப் பாடலாகி" சென்றடிகள் நின்றவாறே, இசைநூல் ஆராய்ச்சியிலும் அனுபூதியிலும் தேர்ந்த நுண்ணிய அறிவுபடைத்த ஆசிரியர்கள் மூலமாய் வந்த இந்த நூலே, திருப்புகழ் அனுபவத்தால் பலவித லயமும் பெறுவார்கள் என்பதற்கு அத்தாக்ஷியாகும். ஸ்ரீ அருணகிரி வேறல்ல முருகன் வேறல்ல; அருணகிரி - ஊதுங்குழல், ஊதிய கண்ணன் பன்னிரு கண்ணன். ஈசன் கருணையே போற்றும் பிரசுரமாகும். இம் முயற்சிகளும் இவற்றில் ஈடுபடும் மேன் மக்களும் நீடூழி வாழ்க. முருகன் கருணை உலகெங்கும் பரவுக. சாந்தி நிலை நிற்கவே.*

---

## திருமுருக கிருபானந்தவாரி அவர்கள்

ஆசிரியர், " திருப்புகழமிர்தம் "

---

### நேரிசை வெண்பா

அண்ணு மலைப்பல் கலைக்கழகம் அன்புடனே
தண்ணு ரமுதமாய்த் தந்ததே—பண்ணுர்
தமிழிசைப் பாடல் தகவுடனே வாழி
அமிழ்தெனவே இன்பம் அமைந்து

செந்தமிழ் நாட்டின் சிறப்புடைத் தெய்வமாக விளங்குபவர் கந்த வேள் ; அவருடைய புகழைச் சந்தத் தமிழால் பாடிப் பந்தத் தொடரை யறுத்த பரமகுருநாதர் அருணகிரிநாதர்.

பதினுயிரம் பாடல்களால், அப்பரமபதி ஒருவரையே பாடிப் பரமபதி விரதநிலையிதுவே என்று உலகுக்கு உணர்த்திய உத்தம வித்தகர் அருணகிரியார்.

முருகவேளுடைய திருமேனியில் அணிந்துள்ள மலர் மாலைகட்குத் தெளிக்கும் பன்னீராகத் திகழ்ந்து நறுமணங் கமழச் செய்வது திருப்புகழ்

" பலபல பைம்பொன் பதக்க மாரமும்
அடிமை சொலுஞ்சொல் தமிழ்ப் பனீரொடு
பரிமள மிஞ்சக் கடப்பமாலையும் அணிவோனே "

இத்தகைய விந்தைமிகுந்து சிந்தைக்கினிய சந்தத் தமிழைப் பாராயணஞ் செய்வோர் எந்த இடர்களும் நீங்கிச் சந்ததமும் திருவருட் செல்வம் பெறுவர்.

நூற்றுக்கணக்காக ஆயிரக்கணக்காக விரிந்து விளங்குவன தாள வகைகள்.

தென்றல் வடிவும் சிவனுர் திருவடிவும்
மன்றல் வடிவும் மதன்வடிவும்—குன்ருத
வேயி னிசைவடிவும் வேதவடி வுங்காண
வாயின் தாளங் காணலாம்

இத்தகைய தாள பேதங்களைத் திருப்புகழ் ஒன்ருலேயே உணர்ந்து உவகையுறலாம்.

ஆகவே தமிழ்மறையாகிய திருப்புகழ்க் கடலில் முழுகிய இசையுலக வேந்தர் சித்தூர் உயர்திரு சுப்ரமண்ய பிள்ளையவர்கள் சில பாடல்களுக்கு இசையும் தாளமும் அமைத்தது மிகவும் உலகிற்கு உபகாரமாகும்.

இதனை மிகவும் நன்ருக அச்சிட்டு வெளியிட்டு உதவிய அண்ணு மலைப் பல்கலைக் கழகத்திற்குத் தமிழுலகம் என்றும் குன்ருத நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்.

இதனை ஏனேரும் ஓதி வானேரும் போற்றும் வளமை பெறுமாறு இளமை நாயகனை இறைஞ்சுகின்றேன்.

உ

திருத்தணிகேசன் துணை

ராவ்பகதூர் தணிகைமணி,

## வ. சு. செங்கல்வராய பிள்ளை எம். எ., அவர்கள்

---

திருப்புகழ் சுர தாளக் குறிப்புடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வெளியிட்ட நூல் கைவரப்பெற்று, நோக்கி, மகிழ்ச்சி மிக அடைந்தேன். அருமையான நூலைப்பற்றிய அருமையான பொருளை இவ்வாறு அருமையான முறையில் அமைத்து அச்சிட்டு வெளியிட்ட பணி மிகவும் பாராட்டத் தக்கதாயுளது. முக்கியமாக, இசைப்பேராசிரியர் இசைமன்னர் திரு. சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் எழுதிய முகவுரையில்—

> " திருப்புகழ் லயத்தையே முதன்மையாகக் கொண்டதாதலின் இதற்குக் கீதம் கீர்த்தனம் முதலியவற்றைப் போலச் சங்கதிகள் போட்டுப் பாடுவது பொருத்தமுடைய தன்றெனக் கருதித் திருப்புகழ்ப் பாடலிலுள்ள மொழிகள் எவ்வாறு நெடில் குறிலாக அமைந்துள்ளனவோ அவ்வாறே சுர தாளக் குறிப்புக்களையும் அமைத்துள்ளேன். இவ்வாறு பாடலிலுள்ள எழுத்துக்களை அனுசரித்தே அவரவர்களுடைய திறமையினால் அழகு படுத்திப் பாடுதல் சிறந்த முறையாகும் "—

என விளக்கமுறக் காட்டியது மிகவும் பொருத்தமான ஒரு சிறந்த குறிப்பாகும். இம் முறையையே உலகம் பின்பற்றுவதாக.

கிடைத்தற்கரிய மாணிக்கத்தைக் கைதேர்ந்த கலைஞன் ஒருவன் செப்பனிட்டதுபோலத் திருப்புகழின் சந்த இசை நுணுக்கங்களை அறிந்து, அவைதமைத் தெளிவுற விளக்கித் தக்கதொரு முறையில் உலகுக்கு அளித்தது போற்றத்தக்க ஒரு நற்பெருந் தொண்டாகும். இத்தொண்டை மேற்கொண்ட அண்ணாமலைப் பல்கலைக் கழகமும் இப் பணியில் ஈடுபட்ட ஆசிரியர்களும்—

என்றும் இன்பம் பெருகும் இயல்பினோ
டொன்றி வாழ்க உலகிற்பல் லாண்டென—

வாழ்த்தியும்,

குழகன் எந்தை திருப்புகழ் கூடிசை
பழக வைத்த அண்ணாமலைப் பல்கலைக்
கழகம் மேற்கொண்ட காண்டகு நற்பணி
அழக தாக அவனியில் ஓங்குமே—

என ஏத்தியும்—திருப்புகழில் உள்ள பிற அரிய சந்தப் பாக்களுக்கும் இங்ஙனமே சுர தாளக் குறிப்புகள் வெளிவந்து நிலவுமாறு திருத்தணிகேசன் திருவருள் கூடுவதாக என வேண்டி—எம்பெருமான் தணிகை நாயகனது பொன்னார் திருவடியைப் போற்றுகின்றேன்.

---

# முகவுரை

இசைமன்னர், திரு. சித்தூர் **சுப்பிரமணிய பிள்ளை** அவர்கள்,
இசைப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

---

சிவபெருமானுக்குத் தேவார திருவாசகங்கள் எவ்வாறு விரும்பத் தக்க தோத்திரங்களாயிருக்கின்றனவோ அவ்வாறே முருகக் கடவுளுக்கு மிகவும் விருப்பமான தோத்திரமாக விளங்குவது திருப்புகழாகும். திருப்புகழாகிய சந்தப் பாமாலையினைப் பாடி முருகப்பெருமானுக்கு அணிந்த பெரியார் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளாவர். அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய செந்தமிழ்ப் பாடல்கள் யாவும் சொல்வளத்திலும் பொருள்நயத்திலும் சிறந்து விளங்குகின்றன. சொல்லக் கருதிய பொருளைக் கேட்போர் உள்ளத்தில் நன்கு பதியும்படி தெரிந்த சொற்களால் திறம்பட எடுத்துரைக்குஞ் சொல்வன்மைக்கு அருணகிரிநாதர் பாடிய திருப்பாடல்களே சிறந்த இலக்கியமாகும்.

> **வாக்கிற் கருணகிரி வாதவூரார் கனிவில்**
> **தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு**
> **நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனூர்**
> **சொற்குறுதிக் கப்பரெனச் சொல்.**

என வழங்கும் பழைய பாடலில் சுவாமிகளது வாக்கு வன்மையினை 'வாக்கிற்கு அருணகிரி' எனச் சிறப்புடையதாகப் போற்றினமை காணலாம். அருணகிரி நாதருடைய பாடல்கள் யாவரும் வியந்து போற்றத்தக்க சொல்வளத்துடன் பொருளமைதியிலும் மிகச் சிறந்து விளங்குவன. அப்பாடல்களிலமைந்துள்ள நுண்பொருள்கள் தெளிந்த ஞானிகளுக்கன்றி ஏனையோர்க்குப் புலப்படுவன அல்ல. அநுபூதிச் செல்வராகிய அருணகிரிநாதர் பாடிய செழும் பாடல்களை நன்கு ஓதியுணர்ந்த அருட் செல்வராகிய தாயுமானசுவாமிகள்,

> **ஐயா அருணகிரி யப்பா உனைப்போல**
> **மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்—வையகத்தோர்**
> **சாற்றரிதென் றேசற்றூர் தன்னனையாய் முக்கணெந்தை**
> **நாற்றிசைக்குங் கைகாட்டி னுன்**

எனத் திருப்புகழாசிரியர் திருவாய் மலர்ந்த செஞ்சொற் பொருளின் நுட்பத்தை வியந்து போற்றியுள்ளார்கள்.

தெய்வத்தன்மை வாய்ந்த இசையினை வளர்த்தற்குத் தெய்வத் தமிழ்ப் பாடல்களாகிய தேவார திருவாசகங்கள் எவ்வாறு உதவுகின்றனவோ அவை போலவே லயசம்பந்தமான இசைவளர்ச்சிக்குத் திருப்புகழ் என்னும் செந்தமிழ்ச் சந்தப் பாடல்கள் பெரிதும் துணை செய்வனவாம். யான் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திற்கு வந்த காலம் முதல் திருப்புகழ்ப் பாடல்களுக்குரிய தாளங்களைக் கண்டறிந்து அப் பாடல்களுக்கு இசையமைத்துத் தரும்படி என்பால் அன்புடையார் பலரும் வற்புறுத்தினர்கள். லய சம்பந்தமான இசைவளர்ச்சிக்குச் சிறந்த இலக்கியமாகத் திகழும் இத்திருப்புகழ்ப் பாடல்களுக்கு இசையமைத்தற்கு மிகவும் தயங்கினேன். ஏனென்றல் உலகத்திலே இசைக் கலைவளர்ச்சிக்காக எத்தனையோ நூல்கள் வெளி வந்துள்ளன. அவைகளில் இலக்கண மட்டுமுள்ள நூல்களும் இலக்கியத்தோடு கூடிய நூல்களும் உள்ளன. இந்நூல்களில் இசைப் பாடல்களுக்குரிய கருத்து, இராகம், தாளம் இவையெனத் தெரிந்துகொள்வதற்கும் இசையமைப்பதற்கும் போதிய வசதியான குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. இங்கு இசையமைத்தற் கெடுத்துக் கொண்ட திருப்புகழ்ப் பாடல்களுக்கு மேலே சொன்னபடி இராகம் தாளம் முதலிய குறிப்புக்கள் கொடுக்கப்பெறவில்லை. இந்நிலையில் திருப்புகழ்ப் பாடல்களுக்குரிய இராக தாளங்களைக் கண்டறிந்து இசையமைப்பது எவ்வாறென்பதே என் மனத்திலெழுந்த தயக்கமாகும். என்னுடைய குருநாதரும் சங்கீத லயப் பிரமமும் ஆகிய காஞ்சீபுரம் நயினப் பிள்ளையவர்களிடத்தில் யான் இசைபயின்ற காலத்தில் அவர்கள் எனக்கு அநேக திருப்புகழ்ப் பாடல்களின் இசையமைதியினையும் தாளவமைதியையும் அன்புகூர்ந்து அறிவுறுத்தினர்கள்.

எனது குருநாதருக்கு ஆப்த நண்பரும் திருப்புகழை இடைவிடாமல் பாராயணம் செய்து அதன் நுட்பங்களை அறிந்தவருமாகிய லயப்பிரமம் மன்னர்குடி கோனக்கோல் வித்வான் பக்கிரியாப் பிள்ளை அவர்களிடத்திலும் இத்திருப்புகழிலமைந்துள்ள இசை நயத்தையும் லய சம்பந்தமான நுட்பங்களையும் அதனைப் பாடவேண்டிய முறையையும் பயிலும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது.

இவ்விருவர்களும் போதித்தருளிய வண்ணம் திருப்புகழ்ப் பாடல்கள் சிலவற்றிற்கு ஒருவாறு சுர தாளக் குறிப்புகள் எழுதத் துணிந்தேன்.

திருப்புகழ் சொற் செறிவிலும் ஓசை நயத்திலும் தாளப் பிரத்தாரங்களிலும் பொருள் நுட்பத்திலும் மிகவும் சிறந்ததென்பதைத் தமிழறிஞர்கள் யாவரும் அறிவர். ஆனல் அதனுள் அமைந்திருக்கும் நுட்பமாகிய தாள லயத்தைச் சிலரே அறிவர். இசைக் கலையில் தேர்ச்சிபெற்ற லய சம்பந்தமான ஆராய்ச்சியுள்ளவர்களுக்கே இதன்கண் அமைந்த தாள நுட்பங்கள் நன்கு புலனுகும்.

யான் என் குருநாதரிடம் இசைபயில வருவதற்கு முன்னரே இத் திருப்புகழிற் சிலவற்றை இசையரங்குகளிற் பாடக் கேட்டிருக்கிறேன். அப்பொழுது எனக்கு இத்திருப்புகழின் பெருமை தெரியவில்லை. பிறகு என் குருநாதர் இத்திருப்புகழைப் பாடியபொழுதுதான் இதன் சிறப்பு விளங்குவதாயிற்று. இசையரங்குகளில் எல்லோரும் திருப்புகழைப் பாடுவதென்பதும் வழக்கத்திற்கு வந்தது. எனது குருநாதரால் இசை யமைக்கப்பெற்ற பாடல்களிற் பல வித்வான்கள் பலராற் பாடப்பெற்று வருதலை இன்றும் காண்கின்றோம். தாள லயத்தினை யுணர்தற்குத் திருப் புகழ் சிறந்த இலக்கியமாகும். நம் நாட்டிலுள்ள இசைப் புலவர் எல் லோரும் சில சில தாளங்களிலேயே இசையமைத்துப் பாடி வந்திருக் கிறார்கள். இன்ன தாளத்திற்குரியது இந்தப் பாடல் என முன்னமே கருதிப் பாடப் பெறாத பாடல்களுக்கு இசைப் புலவர்கள் தாம் விரும்பிய ஏதாவதொரு தாளத்தை யமைத்துப் பாடுவது வழக்கம். அவ்வாறன்றித் தாளமே பாட்டாக அமையப் பாடப்பெற்ற சிறப்புடையது இத் திருப்புகழாகும். திருப்புகழை ஒருவர் சாதாரணமாகப் பாடும்பொழுதே இது இன்ன தாளத்திற்கேற்ற சொல்லமைப்புடைய தென்பதனை இசைத் துறையில் வல்லவர்கள் கண்டுகொள்ளுதல் கூடும்.

அருணகிரிநாதர் முருகக் கடவுளிடத்து இடையறாப் பேரன்பர். அப் பெருமானது திருவருளால் இயலிசைத் திறத்தில் நிறைந்த புலமை வாய்ந் தவர். லய சம்பந்தமான நுட்பங்களமைய வண்ணச் சந்தங்களைப் பாட வல்லவர். அவராற் பாடப்பெற்ற திருப்புகழிலுள்ள சொல் நடைகளும் தாளச் சொற்கட்டுக்களும் தாள வகைகளைப் பெருக்கிச் செல்லுதலாகிய பிரஸ்தாரக் கிரமங்களும் லய சம்பந்தமான இசையிலக்கியம் திருப்புக ழென்பதை நன்கு விளக்குவனவாம்.

அருணகிரிநாதர் வில்லிபுத்தூராருடன் வாதுசெய்யுங் காலத்திலே பாடிய கந்தரந்தாதிக்கு உரைசொல்லிவரும் வில்லிபுத்தூரார், அந் நூலின் 'திதத்தத்த' எனத் தொடங்கும் 54-ஆம் செய்யுளுக்கு உரை சொல்லமாட்டாது தோல்வியுற்றனர் என அறிகின்றோம். வில்லிபுத் தூரார் தோல்வியுற்றதன் காரணம் இப்பாடலில் வரும் 'திதத்தத்த' என்னும் லய சம்பந்தமான சொற் கட்டுக்களை யுணர்ந்துகொள்ள முடியாமையே யென அறிஞர் கூறுவர்.

இசை வளர்ச்சிக்கு இன்றியமையாத முப்பத்தைந்து தாளங்கள், நூற்றெட்டு தாளங்கள், பஞ்ச தாளங்கள், அன்னிய தாளங்கள், பிரத் தாரக் கிரமங்களினால் உண்டாகும் தாளங்கள், ஆகிய இவையெல்லாம் திருப்புகழ்ப் பாடல்களிலே அடங்கியுள்ளன. இவையன்றிக் கதி பேதம், நடை பேதம், கண்டப் பிரத்தாரமென்னும் அங்கம் அழிவு படாமல் பிரத்தாரஞ் செய்யும் முறை என்பனவும் திருப்புகழிலே அடங்கி இருக்

கின்றன. மேற்கூறியபடி பிரத்தாரத்தினுலுண்டாகுந் தாளங்களை எல்லாம் இத்திருப்புகழின் வாயிலாகவே நாம் கையாள வேண்டுமேயன்றி வேறு எந்த முறையிலும் தொழிற்படுத்த வழியில்லை யென்பது என் குருநாதரின் எண்ணமாகும். ஆகவே அவர்கள் சொல்லிவைத்த முறைப்படி முதலாவதாக நூறு திருப்புகழ்ப் பாடல்களுக்குச் சுர தாளக் குறிப்பெழுதி இப்புத்தகத்தினை அண்ணுமலைப் பல்கலைக் கழக இசை நூல் வெளியீடுகளுளொன்ருக வெளியிட வேண்டுமெனப் பல்கலைக் கழக இசைநூல் வெளியீட்டுக் குழுவினர் விரும்பினுர்கள். அவர்களது விருப்பத்தையேற்று எனது குருநாதர் அறிவுறுத்திய முறையினையொட்டித் திருப்புகழில் நூற்றெரு பாடல்களுக்குச் சுரதாளக் குறிப்பெழுதி இசையமைத்துள்ளேன்.

இப்புத்தகத்தில் உள்ள திருப்புகழ்ப் பாடல்கள் நூற்றென்றில் முதலிலுள்ள ஐம்பதும் முன்னமே எனது குருநாதரால் இசையமைத்து இசையரங்குகளிற் பலமுறை பாடப்பெற்ற நிலையில் எனக்குப் போதிக்கப்பட்ட பாடல்களாம். பின்னுள்ள பாடல்கள் ஐம்பத்தொன்றும் எனது குருநாதர் அறிவித்த முறையை யொட்டி யான் இசையமைத்து இசையரங்குகளிற் பாடிவருவனவாகும்.

இப்புத்தகத்திலுள்ள பாடல்களிற் பல முப்பத்தைந்து தாளங்களில் அமைந்தனவாகும். எஞ்சியுள்ள சில பாடல்கள் நூற்றெட்டுத் தாளங்களிலும் அன்னிய தாளங்களிலும் பஞ்ச தாளங்களிலும் அமைந்தனவாம். முப்பத்தைந்து தாளங்களைத் தவிர அன்னிய தாளங்களிலுள்ள திருப்புகழ்களுக்கு அவற்றுக்குரிய அங்கங்களும் காலப்பிரமாணங்களும் அப்பாடல்களின் முன்னும் பின்னும் குறிக்கப்பட்டுள்ளன. இசை பயில்வோர் இவற்றைப் பாடிப் பழகுதற் கேற்றவாறு இத்தகைய குறிப்புக்கள் இந் நூலில் தரப்பெற்றுள்ளன. திருப்புகழ் லயத்தையே முதன்மையாகக் கொண்டதாதலின் இதற்குக் கீதம் கீர்த்தனம் முதலியவற்றைப் போலச் சங்கதிகள் போட்டுப் பாடுவது பொருத்தமுடைய தன்றெனக் கருதித் திருப்புகழ்ப் பாடலிலுள்ள மொழிகள் எவ்வாறு நெடில் குறிலாக அமைந்துள்ளனவோ அவ்வாறே சுர தாளக் குறிப்புக்களையும் அமைத்துள்ளேன். இவ்வாறு பாடலிலுள்ள எழுத்துக்களை யனுசரித்தே அவரவர்களுடைய திறமையினுல் அழகுபடுத்திப் பாடுதல் சிறந்த முறையாகும்.

இங்ஙனம் இத் திருப்புகழ்ப் பாடல்களுக்கு இசையமைக்கும்படி ஊக்கமளித்து இப்புத்தகத்தினைப் பல்கலைக் கழக வாயிலாக வெளிவரச் செய்துதவியவர் நம் பல்கலைக்கழகத் துணைவேந்தராயிருந்து பெருந் தொண்டாற்றிய திருவாளர் டாக்டர் S. G. மணவாளராமாநுசம் M. A., Ph. D. (Lond) D. I. C. Etc, அவர்கள் ஆவர். அவர்களுக்கும்

இப்பொழுது பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் பணியாற்றிவரும் திருவாளர் டாக்டர், சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் B. A., B. L., அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்நூல் வெளியீட்டிற்கு ஊக்கமளித்த பல்கலைக் கழக இசைநூல் வெளியீட்டுக் குழுவினர்க்கு எனது நன்றி யுரியதாகுக.

இந்நூல் வெளியீட்டுப் பணியில் உடனிருந்து இதனைப் பிழையின்றிப் பரிசோதித்துதவிய இப் பல்கலைக் கழகத் தமிழாராய்ச்சி விரிவுரையாளர் திரு. க. வெள்ளை வாரணனார்க்கும் எனது நன்றியுரியதாகும்.

இத் திருப்புகழ்ப் பாடல்களுக்கு இசையமைக்கும் பணியில் உடனிருந்து சுரதாளக் குறிப்புக்கள் எழுதி உதவிசெய்தவர் எனது நண்பரும் கோனக்கோல் வித்வான் பக்கிரியா பிள்ளை அவர்களின் குமாரரும் இப் பல்கலைக்கழக இசைஆசிரியருள் ஒருவரும் ஆகிய திரு. P. வைத்திலிங்கம் பிள்ளையவர்கள் ஆவர். அவர்களுக்கும் எனது நன்றியுரியதாகுக.

இதனைக்காணும் இசைவாணர்களும் புலவர்களும் குற்றம் நீக்கிக் குணங்கொண்டு எனக்கு ஊக்கமளித்து இப் புத்தகத்தை ஆதரித்து ஏற்றுக்கொள்வார்களாகவென ஞானபண்டிதனாகிய முருகக்கடவுளின் திருவடிகளை என்றும் போற்றி வணங்குகின்றேன்.

அருணகிரி நாதர் முருகன் திருவருளைப் போற்றிப் பாடிய தேனினுமினிய திருப்புகழ்ப் பாடல்களை அன்போடு பாராயணம் செய்கின்றவர் யாரோ அவர்களுக்கு முருகக் கடவுளுடைய திருவருளும் லயசம்பந்தமான கலைநுட்பமும் எளிதிற் கைகூடுமென்பது திண்ணம்.

# அருணகிரிநாதர் வரலாறு

(திரு. க. வெள்ளைவாரணன் அவர்கள், தமிழாராய்ச்சி
விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.)

---

முருகப் பெருமானது பொருள்சேர் புகழை இனிய தமிழாற் போற்றிப் பரவுதலையே தமது வாழ்க்கை நோக்கமாகக் கொண்டவரும் வட வேங்கடம் தென் குமரியாகிய எல்லையினையுடைய செந்தமிழ் நாட்டிலே அறுமுகச் செவ்வேள் எழுந்தருளியுள்ள திருக்கோயில்களை யெல்லாம் தாம் பாடிய திருப்புகழ்ப் பாமாலைகளால் வனப்புறச் செய்த மதிநல முடையவரும் முத்தமிழ் வித்தகரும் சிறந்த அநுபூதிச் செல்வரும் ஆகிய அருணகிரிநாத ரென்னும் பெரியார், தமிழகத்திலே நடுநாட்டைச் சார்ந்த திருவண்ணாமலை யென்னுந் திருத்தலத்திலே இற்றைக்கு ஏறக்குறைய ஐந்நூறாண்டுகளுக்கு முன்னே சிறப்புடைய தமிழ்க் குடும்பத்திலே பிறந்து வளர்ந்தவராவர். இவரது குலத்தைப்பற்றியும் இவருடைய தந்தை தாய் இன்னாரென்பதைப் பற்றியும் தெளிவாகத் தெரிந்துகொள்ளுதற்குரிய ஆதரவுகள் கிடைக்கவில்லை.

இவரது வரலாற்றைக் குறித்துத் திருப்புகழ்த் தண்டபாணி சுவாமிகள் என்பார் தாம் பாடிய புலவர்புராணத்திற் பின்வருஞ் செய்திகளைக் குறித்துள்ளார்கள் :—பட்டினத்தடிகள் சிவபெருமான் எழுந்தருளிய பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவண்ணாமலையை யடைந்தார். அப்பொழுது அவ்வூரில் முத்தம்மை யென்னும் பெயருடைய உருத்திர கணிகையைக் கண்டு மயங்கி அவளை அழைப்ப அவள் மறுத்து ஓடிய நிலையில் தம்மிடத்து வெளிப்பட்ட சுக்கிலத்தை ஓர் இலைக்கலத்திற் பெய்து விட்டு யோக நிலையிலமர்ந்திருந்தார். அதனையுணர்ந்த முத்தம்மையின் தாய் தன் மகளை யழைத்துவந்து அடிகளைக்கண்டு வணங்கிய நிலையில் அவர் குறிப்பின்படி இலைக்கலத்திற் பெய்து வைத்ததை முத்தம்மை விழுங்கிக் கருக்கொண்டாள். கரு முதிர்ந்து பத்துத் திங்கள் நிரம்பிய பின் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு அருணகிரிநாதர் எனப் பெயரிட்டனர். குழந்தையின் ஏழாம் வயதில் தாய் இறந்து போகவே தமக்கையார் குழந்தையை வளர்த்து வந்தார். காளைப் பருவ முற்ற அருணகிரிநாதர் ஊழ்வினை வயத்தால் பரத்தையர் பலரொடுங் கூடிப் பொருளிழந்து வறுமையுற்றுக் குட்டம் முதலிய கொடிய நோய்களால் வருந்தினர். ஒரு நாள் தம் தமக்கையாரிடஞ் சென்று தாம் விரும்பிய பரத்தைக்குக் கொடுத்தற் பொருட்டுப் பொன் வேண்டுமெனக் கேட்டார். அதனைக் கொடுத்தற்கியலாத வறுமை நிலையினரான தமக்கையார் 'யானும் பரத்தையே என்னை யணைந்து இன்புறுக' என

மனம் நொந்து கூறினர், அக் கொடுஞ்சொல்லைக் கேட்டு மனம்பொருத அருணகிரியார் தம் இழிநிலைக்கு மிகவும் நாணி வாழ்க்கையில் வெறுப் புற்றுத் தற்கொலை செய்துகொள்ள எண்ணித் திருவண்ணுமலைக் கோபு ரத்தின் மேலேறிக் குதித்தார். இவ்விடர் நிலையில் எல்லாவுயிர்களிடத் தும் பேரருளுடையராகிய முருகப்பெருமான் கோவண ஆடையுடுத்த துறவியாகத் தோன்றிக் கோபுரத்திலிருந்து விழும் அருணகிரியாரைத் தம் அருட்கைகளால் தாங்கித் திருநீறளித்து ஆறெழுத்தினை யுபதேசித்து அக்கோபுரத்தின் அருகேயுள்ள முருகவேள் திருவுருவத்தை வழிபடும்படி அறிவுறுத்தி மறைந்தருளினர். அன்றுமுதல் அருணகிரியார் பொது மகளிர்பால் வைத்த வேட்கையை விடுத்து முருகப்பெருமானுடைய திரு வடிகளையே துணையாகக் கொண்டு தூய வாழ்வு வாழ்ந்தார். இங்ஙனம் இவர் திருவருள் நெறியிற் பயில்கின்றமையறிந்த இவருடைய தமக்கை யார் அளவிலா மகிழ்ச்சியடைந்தார். அருணைக்கோபுரத்தில் தங்கிய அருணகிரிநாதர் திருப்புகழ்ப் பாடல்களையும் வகுப்புக்களையும் பாடி அறுமுகப் பெருமானை வழிபட்டிருந்தார். அப்பொழுது முருகப் பெரு மான் மயில்மீது தோன்றிக் காட்சி தந்தருளினர். அவருடைய தமக்கை யாரும் சில நாளில் இறைவனடி சேர்ந்தார்.

திருமுனைப்பாடி நாட்டில் சனியூரிற் பிறந்த பெரும் புலவரும் தம்பால் தோல்வியுற்ற புலவர்களின் காதையறுத்துப் பணியச் செய்தலையே தொழிலாகக் கொண்டவரும் ஆகிய வில்லிபுத்தூரார் என்னும் வைணவப்புலவர் அருணகிரிநாதரை வாதில் வெல்லக் கருதித் திருவண்ணுமலைக்கு வந்து சேர்ந்தார். அவ்விருவரும் அரசன் முன்னிலை யில் அறிஞர் பலருங்காண வாதஞ் செய்வாராயினர். ஒருவர் பாட ஒருவர் பொருள் சொல்வது என்னும் முறையில் அருணகிரிநாதர் **கந்தரந் தாதி** யென்னும் நூலினைப்பாட வில்லிபுத்தூரார் அப்பாடல்களுக்கு அவ்வப்பொழுதே உரை கூறிவந்தார். அந்நூலின் 54-ம் பாடலாகிய 'திதத்தத்த' எனத் தொடங்கும் பாடலை அருணகிரிநாதர் பாடியபொழுது வில்லிபுத்தூரார் அப் பாடற்குப் பொருள் கூறமாட்டாது தோல்வி யுற்றார். தோற்ற வில்லிபுத்தூராரது காதினை யறுத்தல் முறையா யினும் முருகன்பாற் பேரன்புடைய அருணகிரிநாதர் அக் கொடுந்தண்ட னையைச் செய்தற்கு உளங்கூசி வில்லிபுத்தூரார்பால் இரக்கமுடைய ராயினர். அவரது அருட்குணத்தை யுணர்ந்த வில்லிபுத்தூரார் அருணகிரிநாதரை வணங்கி மனந்தூயராய்த் தம் ஊரையடைந்தார். பின்னர் அருணகிரிநாதர் **மயில்விருத்தம் வேல்விருத்தம்** முதலியன பாடிப் பல தலங்களையும் திருப்புகழாற் போற்றி வணங்கித் திருச்செந் தூரை யடைந்தார். தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களெல்லாவற்றை யும் முருகப் பெருமான் முன்னிலையில் ஓதிநின்று இத் திருப்புகழைப் பாடும் அடியார்கள் யாவரும் நல்வாழ்வு பெறும்படி வரம்தரல் வேண்டு மெனக் குறையிரந்து வேண்டினர். முருகப் பெருமான் தம் வேண்டு

கோளுக்கிசைந்து வெளிப்பட்டருளாமைக்கு வருந்திய அருணகிரிநாதர் தாம்பாடிய பாடல்கள் வரையப்பெற்ற திருப்புகழேடுகளைக் கடலில் எறிந்தார். அதுகண்டு அங்குள்ள அன்பர்கள் அவ்வேடுகளிற் கடலிற்போனவை போக எஞ்சியவற்றைப் பொறுக்கியெடுத்துச் சேமித்து வைத்துக் கொண்டார்கள். அருணகிரியார் அங்கிருந்து இலஞ்சி முதலிய தலங்களை வணங்கித் திருவண்ணுமலைக்குத் திரும்பினுர். திருவண்ணுமலையில் வாழ்பவனும் அம்பிகையின் அருள்பெற்றவனுமாகிய சம்பந்தாண்டான் என்னும் புலவனொருவன் அருணகிரிநாதரை அரசன் முதலிய எல்லோரும் பணிந்து போற்றுதலைக் கண்டு பொருமையுற்றவனுகி அவரை வாதுக்கழைத்தான். அருணகிரிநாதர் தம் வழிபடு கடவுளாகிய முருகப்பெருமானைப் பிரபுடதேவராசன் காண வரவழைத்துச் சம்பந்தாண்டானை வாதில் வென்ருர். பின்பு சம்பந்தாண்டானது தூண்டுதலால் அரசன் பாரிசாதமலர் வேண்டுமென அருணகிரிநாதரை வேண்டிக்கொள்ள அவரும் அதற்கிசைந்து கூடுவிட்டுக்கூடுபாயும் முறையால் தமது உடம்பை ஓரிடத்தில் வைத்துவிட்டுக் கிளியுருவுடன் வானுலகடைந்தார். அதனை யறிந்த சம்பந்தாண்டான் அருணகிரியாரது உயிர் நீங்கிய வெற்றுடம்பைக் காட்டி அவர் பாரிசாதமலர் கொணருந் திறமின்றி நஞ்சுண்டிறந்தார் என்ற பொய்ச் செய்தியை அரசன் நம்பும்படி கூறி அவ்வுடம்பைத் தீயிலிடச் செய்தனன். கிளியுருவுடன் வானுலகடைந்து பாரிசாதமலர் கொணர்ந்த அருணகிரியார் அம்மலரை அரசனிடம் கொடுத்துவிட்டுத் தமது பழைய வுடம்பைத் தேடிக் காணுது தாம் மேற்கொண்ட கிளி வடிவத்துடனே அருணைக் கோபுரத்தில் வாழ்ந்திருந்து **கந்தரநுபூதி, கந்தரலங்காரம்** முதலிய நூல்களைப் பாடித் திருக்கயிலையையடைந்து முருகன் திருத்தோளில் என்றும் கிளியுருவுடன் இன்புற்றிருக்கும் ஈறிலாப் பேரின்ப வாழ்வையடைந்தார்.

இது அருணகிரிநாதரைக் குறித்து வழங்கும் வரலாருகும். அருணகிரிநாதர் வரலாற்றைச் சேர்ந்தனவாக இங்கெடுத்துக் காட்டிய செய்திகளுட் பல பிற்காலத்தவராற் புனைந்து சேர்க்கப்பட்டனவாகும். "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல், ஆருந் துறக்கை அரிதரிது' எனத் தாயுமான சுவாமிகள் பட்டினத்தடிகளது தூய துறவு நெறியினை வியந்து பாராட்டிப் போற்றியுள்ளார்கள். இவ்வாறு அருட் செல்வர் பலராலும் போற்றப்பெறும் பட்டினத்தடிகள் திருவண்ணுமலையில் முத்தம்மை யென்னும் உருத்திர கணிகையைக் கண்டு மயங்கிக் கழிகாமுகராய் உள்ளத்துறுதியிழந்தாரென்னும் இக்கதையினை அறிஞர் அருவருத் தொதுக்குவரென்பது திண்ணம். பட்டினத்தடிகள் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதியாகும். அருணகிரிநாதர் வாழ்ந்த காலமோ கி. பி. பதினைந்தாம் நூற்ருண்டாகும். இவ்விருவர்க்கும் பன்னூருண்டுகள் இடையிட்ட நிலையினை யுணர்ந்தோர் இக் கதையினைப் பொருளாகக்

கொள்ளமாட்டார்கள். அருணகிரிநாதர் தம்மைப் பெற்றெடுத்த தாயை யும் தந்தையையும் 'சீலமுள தாயார் தந்தை' (690) எனக் குறிப்பிடு கின்றார். எனவே அவருடைய தாயும் தந்தையும் நல்லொழுக்கத்திற் சிறந்து விளங்கிய நல்லகுடிப் பிறந்தவர் என்பதும் அவருடைய தாயைப் பரத்தையர் என்று சொல்லுதற்கு ஒரு சிறிதும் இடமில்லை யென்பதும் அவர் தந்தையார் கழிகாமுகரல்லரென்பதும் நன்கு பெறப்படும். அங்ஙன மாகவும் அருணகிரிநாதருடைய சீலமுள்ள தாயையும் தந்தையையும் சீலமற்ற பரத்தையாகவும் கழிகாமுகராகவும் இழிவாகக் கதைபுனைந் துரைப்பது அருணகிரிநாதர் பாடிய திருப்புகழுக்கு முற்றும் முரண்படுவ தாகும். ஆகவே அருணகிரிநாதர் பிறப்பைக் குறித்துப் பேசப்பட்டு வரும் இப் பொய்க் கதையினை மெய்மை வரலாற்றில் விருப்புடையோ ரெவரும் நம்பமாட்டார்களென்பது உறுதி.

திருப்புகழாசிரியராகிய அருணகிரிநாதர் நற்குடியிற் பிறந்து சுற்றத் தாரொடு வாழ்ந்தவர் என்பதனை அவர் பாடிய திருப்புகழ்ப்பாடல் களில் தம்மைக் குறித்துக் கூறும் குறிப்புக்களால் நன்குணரலாம். இளம் பருவத்திலேயே கல்விகற்றுப் புலமையெய்திய இவர் பண்டையூழ் வினைத்தொடர்பால் பரத்தையரோடு உறவுகொண்டு சிற்றின்பத்துறை யில் எளியராகிப் பொருளிழந்து நோய்வாய்ப்பட்டு வருந்தினார். பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கத்தால் கொடும் பிணிகளை யடைந்து இழி நிலையடைந்த இவர் தம்மை நோக்கி நண்பர் சுற்றத்தார் முதலியவர்கள் கூறும் வசைச் சொற்களைப் பொறுக்க மாட்டாது நாணி உலகவாழ்க் கையை வெறுத்துத் தற்கொலை செய்துகொள்ளத் துணிந்த துன்பநிலை யினையும் அவ்விடர் நிலையில் அருள்வள்ளலாகிய அறுமுகப் பெருமான் தம்மை அருள்தரு கைகொடுத்து உய்வித்துப் பிணிதீர்த்த பேரருட் டிறத்தையும் தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களிற் பலவிடத்தும் உளங் கசிந்து எடுத்துரைத்துள்ளார்.

> "மனையவள் நகைக்க ஊரி லனைவரு நகைக்க லோக
> மகளிரும் நகைக்க தாதை தமரோடும்
> மனமது சலிப்பநாய னுளமது சலிப்ப யாரும்
> வசைமொழி பிதற்றிநாளு மடியேனை
> அனைவரு மிழிப்ப நாடு மனவிருள் மிகுத்து நாடி
> அகமதை எடுத்தசேமம் இதுவோவென்
> றடியனு நினைத்துநாளு முடலுயிர் விடுத்தபோதும்
> அணுகிமுன் அளித்தபாதம் அருள்வாயே" (1131)

எனவருந் திருப்புகழ்ப் பாடல் இவர் உயிரை உடம்பினின்று நீக்கிக் கொள்ள எண்ணிய துன்பக் காலத்தே அடியார்க்கெளிய அருளாளனாகிய முருகப்பெருமான் இவர்க்குமுன் தோன்றி உய்வித்தருளிய பேரருட்டி

றத்தை இனிது விளக்குவதாம். எனவே அருணகிரிநாதர் தம்முயிரைப் போக்கிக்கொள்ள எண்ணியதும் அங்கிலேயில் அறுமுகப்பெருமான் எளிவந் தருள் செய்ததும் ஆகிய இந்நிகழ்ச்சி அருணகிரிநாதர் வரலாற்றேடு ஓரளவு தொடர்புடைய தென்றே கொள்ளவேண்டியுளது.

அருணகிரிநாதருக்கு 'முத்தைத்தரு......எனவோது' என முருகப் பெருமான் அடியெடுத்துக் கொடுத்ததாகவும், அவர் நாவினில் வேல் கொண்டெழுதியதாகவும் வரகவி மார்க்கசகாய தேவர் தாம் பாடிய திரி விரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழிற் குறிப்பிட்டுள்ளார். வில்லிபுத்தூரா ருடன் வாதுசெய்தமை, சம்பந்தாண்டானை வாதில் வென்றமை, கிளியுரு வெடுத்துப் பாரிசாதமலர் கொணர்ந்து கந்தரநுபூதியும் கந்தரலங் காரமும் பாடினமை ஆகிய செய்திகளைக் கந்தப்ப தேசிகர் தாம் பாடிய திருத்தணிகைச் சந்நிதிமுறை யென்ற நூலிற் குறிப்பிட்டுள்ளார். சொல் லறச் சும்மா விருத்தலாகிய மோனநிலையைப்பற்றியும் ஓங்காரப்பொருள், அத்துவிதவுண்மை முதலிய ஞானப்பொருள்களை யுபதேசித்த அருட் செயலைப்பற்றியும் திருவண்ணமலை, வயலூர், பழநி, திருச்செந்தில், திருத் தணிகை முதலிய திருப்பதிகளில் முருகப்பெருமான் நனவிலுங் கனவிலுந் தமக்குமுன் தோன்றிக் காட்சியளித்து அரிதாகிய மெய்ப்பொருளை உரிய நிலையில் உபதேசித்த முறைமையைப்பற்றியும் அருணகிரிநாதர் தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களிற் குறித்துப் போற்றுதலால் அடியார்க் கெளியனுகிய அறுமுகச் செவ்வேள் அருணகிரிநாதர்முன் தோன்றி அருளுபதேசம் செய்தருளினமை நன்கு தெளியப்பெறும். அரிணகிரிநாதர் தாம் பாடிய பாடல்களைக் கடலில் எறிந்தார் என்பதற்கு எவ்வித சான்று மில்லை.

திருச்சிராப்பள்ளிக்கருகிலுள்ள வயலூர் என்னுந் திருப்பதியினைத் திருப்புகழ்ப் பாடல்கள் பலவற்றிலும் குறித்துப் போற்றுதலை ஆழ்ந்து நோக்குங்கால் அவ்வூரில் முருகப்பெருமான் அருணகிரிநாதர்க்குச் சிறப்பு முறையிற் காட்சி தந்தருளினமை புலனும். இவ்வாறே அருணை, பழநி, செந்தில், தணிகை, செங்கோடு என்னுந் தலங்களும் திருப்புகழாசிரியரால் பல பாடல்களிலும் குறித்துப் போற்றப் பெற்றுள்ளன. எனவே இத் தலங்களில் அருணகிரிநாதர்க்கு மிகுந்த ஈடுபாடுண்டென்பது நன்கு பெறப்படும்.

இனி, அருணகிரிநாதர் வில்லிபுத்தூராருடன் வாது செய்தமைக்குச் செவிவழியாக வழங்கும் கதையொன்றைத் தவிர வேறு சான்றில்லை. சம்பந்தாண்டானேடு வாதுசெய்த காலத்து அருணகிரியார் கிளியுருக் கொண்டு பாரிசாத மலர் கொணர்ந்தமைக்கும் கிளியுருவோடு கந்தரநுபூதி முதலியன பாடியதற்கும் திருப்புகழாசிரியர் பாடிய பாடல்களில் எத் தகைய சான்றுமில்லை. தாயுமானசுவாமிகள், திருப்போரூர்ச் சிதம்பர

சுவாமிகள், வரகவி மார்க்க சகாய தேவர் முதலிய பெரியோர்கள் அருண கிரி நாதரைக் குறித்துப் போற்று மிடங்களில் அவர் கிளியுருப்பெற்ற செய்தியைக் குறிப்பிடவேயில்லை.

> "மவுனபஞ்சரம் பயில்தரும் சுகபதம்
> அடைந்திருந்தருள் பொருந்துமதொருநாளே"

என்றும்,

> "சாயுச்சியகதியை ஈறற்ற சொற்சுக சொரூபத்தை
> யுற்றடைவேனே"

என்றும் வரும் திருப்புகழ்ப் பாடல்களில் முறையே மோனநிலையாகிய கூட்டில் அமைதியாக வாழும் இன்ப வாழ்வைப்பெற்று நின் திருவரு ளோடு பொருந்தும் நாள் எந்நாளோ என்றும், அழிவில்லாத பேரின்பப் பொருளையடைந்து இன்புறும் பேற்றிற்கு யான் உரியனாவேனோ என்றும் உளமுருகிக் கூறுகின்றார். இங்கெடுத்துக் காட்டிய தொடர்களில் வந் துள்ள **சுகபதம், சுகசொரூபம்** எனவரும் இரு சொற்களுக்கும் இன்பநிலை யென்பதே அருணகிரிநாதர் கருதிய் பொருளாகும். நிரம்பிய கல்வி யில்லாதாரொருவர் இச்சொற்களுக்குக் கிளியுருவெனத் தவறாகப் பொருள் கொண்டமையினாலேயே இத்தகைய பொருந்தாச் செய்தி அருணகிரிநாதர் வரலாற்றில் இடம் பெறுவதாயிற்று.

அருணகிரிநாதர் தம் காலத்து ஆட்சிபுரிந்த அரசராகிய பிரபுட தேவமகாராயரை 'அதலசேடனாராட' என்ற தலைப்புடைய திருப்புகழில்,

> 'உதயதாம மார்பார் பிரபுட தேவ மாராஜன்
> உளமுமாட வாழ்தேவர் பெருமாளே'

என்ற தொடராற் பாராட்டியுள்ளார். இதனால் இவ் வேந்தன் முருகப் பெருமான்பால் நிறைந்த பேரன்புடையவ னென்பதும் இப் பிரபுட தேவ மாராசன் உளமும் ஆட முருகப்பெருமான் அருள்புரியு மியல்பினை அருணகிரியார் நேரிலறிந்தவரென்பதும் அப்பெரியார் வியந்து பாராட் டும்படி இவன் முருகனது திருவருளை நிறையப் பெற்றவன் என்பதும் நன்கு விளங்கும். இவ்வேந்தன் ஆட்சிபுரிந்தகாலம் கி. பி. 15-ம் நூற்றாண்டாகும். 'ஒரு வழிபடாது' என்ற தலைப்புடைய திருப்புகழில்

> 'அரிவையொரு பாகமான அருணகிரிநாதர் பூசை
> அடைவுதவறாது பேணும் அறிவாளன்
> அமணர்குல காலனாகும் அரியதவ ராஜராஜன்
> அவனிபுகழ் சோமநாதன் மடமேவும் முருக'

என்ற தொடரால் சோமநாதன் என்ற பெயருடைய திருமடத் தலைவரை யும் அவரது சிவவழிபாட்டின் செம்மையையும் தவத்தூய்மையையும்

குறித்து அவருடைய திருமடத்தில் எழுந்தருளிய முருகப்பெருமானை அருணகிரிநாதர் போற்றியுள்ளார். ஆரணி தாலுகாவைச் சேர்ந்த புத்தூர்க் கோயிலில் வரையப்பட்ட சாசனமொன்றில் கி. பி. 1370-ல் வீரபொக்கண உடையாரால் சோமநாத ஜீயர் என்னும் பெயருடை சிவாசாரிய ரொருவர்க்குப் புத்தூர்க் கோயிலும் மடமும் உரிமையாக வழங்கப்பட்ட செய்தி குறிக்கப்பட்டுளது. இச் சோமநாத ஜீயரே அருணகிரிநாதராற் போற்றப்பட்ட மடாதிபதியாவர் என ஆராய்ச்சி யாளர் கூறுவர். எனவே திருப்புகழ் நூலாசிரியராகிய அருணகிரிநாதர் வாழ்ந்த காலம் கி. பி. 14-ம் நூற்றாண்டின் இறுதியும் 15-ம் நூற்றாண் டின் தொடக்கமும் ஆம் என்பது நன்கு துணியப்படும்.

15-ம் நூற்றாண்டில் 'சாளுவாப்தயுதயம்' என்ற வடமொழிக் காவியத்தை இயற்றிய ராஜநாத கவியென்னும் வேதியர், தம் தந்தை யாகிய சோணாத்திரி நாதரை 'ஸார்வபௌம டிண்டிமகவி' என்றும் அஷ்டபாஷாபரமேசுவரர்' என்றும் சித்திரகவி பிரபந்தம் இயற்று வதிற் சிறந்தவரென்றும் சேர சோழ பாண்டியர்களால் பிரதமாராத்ய ராகப் போற்றப்படுபவரென்றும் தம் நூலிற் சிறப்பித்துள்ளார். இங்ஙனம் வட நூல்களிற் புகழப்படும் சோணாத்திரிநாதரே தமிழ்ப் புலமையிற் சிறந்த அருணகிரிநாதர் என ஆராய்ச்சியாளர் சிலர் எழுதி யுள்ளனர். அவர்கள் கருதும்வண்ணம் ராஜநாத கவியின் தந்தையாரே திருப்புகழாசிரியர் என்பது உண்மையானல் தம் தந்தையின் புலமைத் திறத்தையும் அவருக்கு வேந்தர்பாலுள்ள நன்மதிப்பையும் தம் நூலிற் குறிப்பிடக் கருதிய ராஜநாதகவி தம் தந்தையார் தமிழ்ப் புலமையிற் சிறந்து கந்தரநுபூதி பெற்றுத் திருப்புகழ் பாடிய அருளின் நீர்மையைத் தம் நூலிற் குறிப்பிடாதிருக்க மாட்டார். தம் தந்தையார் முருகன் அருள் பெற்றவர் என்பதற்குரிய குறிப்பெதுவும் அவராற் குறிக்கப் படாமையால் அவருடைய தந்தையாரே திருப்புகழாசிரியர் என்னும் கூற்றிற்கு ஒரு சிறிதும் இடமில்லையென்க. அன்றியும் திருப்புகழாசிரி யரைத் திண்டிம கவியெனக் கூறும் வழக்கம் தமிழ் மக்கள் அறியாத தொன்றும். அருணகிரியார் திருப்புகழில் வடசொல் விரவியிருத்தலைச் சான்றாகக் காட்டி அவர் வேதியர் குலத்திற் பிறந்தவர் என்று கூறும் வாதம் ஏற்புடையதாகாது. ஆகவே இவ்விரு புலவர்களும் வேறாவ ரென்று கொள்ளுதலே பொருந்துவதாகும்.

கலிசைச்சேவகனர் என்னும் பெரியார் வீரை யென்னும் ஊரில் தாம் அமைத்த திருக்கோயிலுள் பழநி வேலாயுதப் பெருமானது திருவுருவ மைத்து வழிபட்டு வந்தார். அத் திருக்கோயிலைக் கண்டு வணங்கிய அருணகிரிநாதர்,

**'மேகநீகரான கோடைமாநய காதிபதி**
**வாரிகலீ மாருதகரோ பாரி மாமதன**

**வேள்கலிசை வாழவரு காவேரி சேவகன—துளமேவும்**
**வீரைநகர் வாழ் பழநி வேலாயுதா அமரர் பெருமாளே'**

என அப் பெரியாரைப் பாராட்டிப் போற்றியுள்ளார்.

முருகன் திருவருள்பெற்ற அருணகிரிநாதர் தம்மை ஆட்கொண்டு பிணிதீர்த்தருளிய அறுமுகப் பெருமானுடைய அருட் செயல்களை இயலிசைத் தமிழ் மாலைகளாற் புகழ்ந்து போற்ற விரும்பி அப்பெருமானது பொருள்சேர் புகழை விரித்துரைத்தற்கேற்ற புதிய சந்தங்களை வகுத்துக் கொண்டார். இச்சந்தங்கள்யாவும் திருப்புகழ்ச்சந்தங்கள் என வழங்கப் பெறுவனவாயின. இத்தகைய வண்ணச் சந்தங்களை முதன் முதலமைத்துப் பாடியவர் பதினொராந் திருமுறை யாசிரியர்களுள் ஒருவராகிய பட்டினத்தடிகளாவார். இவராற்பாடப்பெற்ற கோயில் நான்மணிமாலையிலுள்ள சந்தச் செய்யுட்கள் அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்யாப்பிற்கு அடிப்படையாக அமைந்துள்ளன. இப் பாடல்களின் யாப்பமைதியினைப் பின்பற்றி அடிதோறும் ஈற்றில் தொங்கலென வழங்கும் தனிச் சொற்களையமைத்துப் பாடிய நிலையில் தோன்றிய செய்யுள் வகைகளே திருப்புகழ்ச் சந்தங்களாம். அடியாருளங் களிக்க ஆடும் மயிலின்மேல் அணிபெற எழுந்தருளும் அறுமுகப்பெருமானது மெய்ப்புகழைத் தாளவமைதி பொருந்தப் பாடிப் போற்றுதற்கு ஏற்புடையனவாக அமைந்தமையால் இவ்வகைப் பாடல்களையே முருகன் புகழைப் பாடுதற்கேற்ற பாடல்களாகத் திருப்புகழாசிரியர் மேற்கொள்வாராயினர். இத்திருப்புகழ்யாப்பு முதன்முதல் பட்டினத்தடிகளால் தொடங்கப்பெற்று அருணகிரிநாதரால் விரிவுபெற்று நிறைவேறியதாகும்.

இன்றிருந்து நாளையிறக்குமியல்பினரான மக்களது புகழ் என்றுவது ஒரு நாளில் அழிந்தொழிதல் திண்ணம். ஈறில்லாதவனுகிய இறைவனது பொருள்சேர் புகழே என்றும் பொன்றுது நிலைநிற்குஞ் சிறப்பினதாம். மற்றையோரது புகழிற்கில்லாத பெருமை இறைவனது புகழுக்குள தாதல் கருதி இறைவனது புகழைத் திருப்புகழ் எனச் சிறப்பித்துரைப்பர் பெரியோர். 'திருப்புகழ் விருப்பாற், பன்னலந்தமிழாற் பாடுவேற் கருளாய் பாசுபதா பரஞ்சுடரே' எனச் சிவபெருமானை நோக்கிச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் வேண்டிய விண்ணப்பத்தில் இறைவனது புகழைத் திருப்புகழ் எனச் சிறப்பித்துள்ளமை காணலாம். இவ்வாறே அருணகிரி நாதரும் முருகப்பெருமானது பொருள்சேர் புகழையும் அப்புகழைப் பல வகையில் விரித்துக் கூறுதற்குரிய செந்தமிழ்ப் பாடல்களையும் திருப்புகழ் என்ற பெயரால் தம் பாடல்களிற் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இம்முறையினை யுளத்துட்கொண்டே இவர் திருவாய் மலர்ந்தருளிய தெய்வப் பாடல்களும் திருப்புகழ் என்ற பெயரால் பண்டு தொட்டு வழங்கப் பெற்று வருவனவாயின.

காம இன்பமே வாழ்க்கைப் பேறெனக்கருதிப் பொருட் பெண்டிரது பொய்மை முயக்கினையே பெரிதும் விரும்பித் தமது வாழ்நாட்களையெல்லாம் வீணுட்களாக்கிப் பல்வகைப் பிணிகளால் அல்லலுற்றுத் தெய்வமுண்டென்னுந் தெளிவின்றியுழலும் இழிசினர்களை நல்வழிப்படுத்தத் திருவுளங்கொண்ட அருணகிரிநாதர், பொருட் பெண்டிராகிய பரத்தையரது வஞ்சநெஞ்சத்தியல்பினையும் அவர்கள்பால் வைத்த மயலால் மதிகெட்ட மாந்தரது இழிநிலையையும் தம்மேல் வைத்துரைக்கு முகமாக உலக மக்களனைவரும் நிலையில்லாத சிற்றின்பத்திற் செலுத்தும் விருப்பத்தை விடுத்துப் பேரருளாளனாகிய முருகப்பெருமான்பால் அன்பு செய்யும்படி தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களால் அறிவுறுத்தியுள்ளார். சிறுமையுடைய காம நுகர்ச்சியாலுளவாந் தீமைகளை யெடுத்துக் காட்டி இறைவனது அருளாரமுதப் பெருங்கடலில் அன்பர்களனைவரையும் திளைத்தின்புறச் செய்வதே அருணகிரிநாதரது சிறந்த குறிக்கோளாகும். தாம் அறியாமையாற் குன்றியனைய பிழை செய்திருப்பினும் அச் சிறுபிழையைக் குன்றமனையதாகக் கருதியிரங்குதல் பெரியோரதியல்பாகலின் அவ்வியல்புடைய திருப்புகழாசிரியர் தம்பால் தினையளவு குற்றம்வரினும் அதனைப் பனையளவாகக்கொண்டு அக்குற்றத்தால் வரும் பழிக்கு நாணி முருகப்பெருமான்பால் குறையிரந்து குற்றந்தவிர்க்க வேண்டும் பாடல்கள் படிப்போருள்ளத்தை யுருக்குவனவாம்.

அருணகிரிநாதர் பாடியனவாக விநாயகர் வணக்கப் பாடல்களுடன் சேர்த்து 1367 திருப்புகழ்ப் பாடல்கள் வெளிவந்துள்ளன. கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரநுபூதி, திருவகுப்பு என்பனவும் அருணகிரிநாதரால் இயற்றப் பெற்றனவேயாம். மயில் விருத்தம், வேல் விருத்தம் என்பனவும் அருணகிரிநாதர் பாடியனவாகவே வழங்குகின்றன. இவற்றை அருணகிரிநாதர் வாக்கல்லவெனக் கருதுவாருமுளர். உண்மை காணுதற்குப் போதிய சான்றில்லை. கந்தரநுபூதியின் பாடல்கள் ஐம்பத்தொன்றெனப் பலரும் நாற்பத்து மூன்றெனச் சிலருங் கொள்வர். இப்பொழுது வெளிவந்து வழங்கும் அச்சுப் புத்தகத்தில் நூற்றைந்து பாடல்கள் உள்ளன. இதனை நோக்குங்கால் அருணகிரிநாதர் பாடல்களிற் பிற்காலத்தவர் பல பாடல்களைப் பாடி நுழைத்துள்ளமை புலனாம். இங்ஙனம் பிற்காலத்தவராற் பாடி நுழைக்கப்பட்ட இடைச்செருகல்களை நீக்கித் தூய வுருவத்தில் அருணகிரிநாதர் திருப்பாடல்களை வெளியிடின் அது பலர்க்கும் நன்கு பயன் தருவதாகும்.

இசைத் தமிழ் வளர்ச்சிக்குரிய தாளவிலக்கண அமைதிகளும் அருணகிரிநாதர் காலத்தில் வழக்கிலுள்ள சிறந்த இராகங்களும் பழந்தமிழ்ப்பண்களும் யாழ் முதலிய நரம்புக்கருவிகளும் தோற்கருவி துளைக்கருவி கஞ்சக்கருவி என்பனவும் ஆடல் பாடல் இயல்புகளும் திருப்புகழ்ப் பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன. இராமாயணம் மாபாரதம் என்பவற்றுட் கூறப்

பட்ட திருமால் அருட்செயல்களும் செந்தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானது முழுமுதற்றன்மையும் அக்கடவுள் அவுணரைப்பொருது அமரரை வாழ்வித்த போர்த்திறமும் தன்னடியார்க்கு இன்பங்கள் தருமியல்பும் சைவசமய தத்துவவுண்மைகளும் திருமுறையாசிரியர்கள் பெருமையும் முருகப்பெருமான் திருத்தலங்கள் தோறும் கோயில் கொண்டெழுந்தருளிய திறமும் அங்கங்கே விரும்பி வழிபடும் அன்பராயினோர்க்கு அப்பெருமான் அருள்புரியு முறையும் அடியார்கள் அறுமுகப் பெருமானைப் பூசனைபுரிந்து போற்று முறையும் அறுமுகப் பெருமான் வள்ளி தெய்வயானையாகிய தேவியர்களுடன் வேலேந்தி நீலமயில் மீதமர்ந்து அடியார்கள் காண எழுந்தருளிக் காட்சி வழங்கும் அருட்டிறமும் உரையுணர்விறந்து நின்ற முழுமுதற் பொருளாகிய அப் பெருமானைக் கண்டு அவனோடு ஒற்றித்து நுகரும் அழிவிலாப் பேரின்பச் சுவை நலமும் திருப்புகழாகிய இத் திருமுறையிலே விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

சைவ சித்தாந்த அநுபூதிச் செல்வராகிய தாயுமான சுவாமிகள், ‘பூவுலகில் வளர் அருணகிரியே’ என்றும் ‘ஐயா அருணகிரியப்பா உனைப்போல, மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்’ என்றும் ‘யான்றனென லறலே யின்ப நிட்டை யென்று அருணைக்கோன் தானுரைத்த மொழி கொள்ளாயோ’ என்றும் ‘கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன, எந்தையருள் நாடி யிருக்கு நாள் எந்நாளோ’ என்றும் ‘அறிவை யறிவதுவே யாகும் பொருளென்று உறுதி சொன்ன வுண்மையினை யோருநாள் எந்நாளோ’ என்றும் அருணகிரிநாதரைக் குறித்துப் போற்றும் வாய்மொழிகளே அறுமுகப் பெருமானருள் பெற்ற திருவருட் பெரியாராகிய திருப்புகழாசிரியருடைய மெய்ம்மை வரலாற்றை விளக்கவல்லனவாம்.

திருப்புகழாசிரியருடைய சொற்றிறனும் இன்னோசையுடன் கூடிய சந்தப்பாவன்மையும் இன்னிசைத் திறனும் புலவர் போற்றும் சிறப்புடையனவாம். இவர் பாடிய பாடல்கள் யாவும் உலக வழக்கிலுள்ள எளிய சொற்கள் நிரம்பப்பெற்று உயர்ந்த நுண்பொருள்களை யாவரும் எளிதிலுணர்ந்து மகிழத்தக்க வகையில் அமைந்துள்ளன. இவ்வாசிரியர் உலக மக்கள் பலரிடையே பெருகிக் காணப்படும் குறைபாடுகளையெல்லாம் தம் மேலேறிட்டுக்கொண்டு அவற்றை நீக்கியருளும்வண்ணம் முருகப்பெருமானைக் குறையிரந்து வேண்டும் பாடல்கள் யாவும் அக்குற்றமுடையோருள்ளத்தைத் திருத்தி நல்வழிப்படுத்தும் ஆற்றலுடையனவாகும். சொல்லக்கருதிய நற்பொருள்களை எல்லோரும் தெளிவாக அறிந்து தத்தம் வாழ்க்கையில் உறுதியாகக் கடைப்பிடித்தொழுகும்படி திறம்பட அறிவுறுத்துவனவாய்ச் சொல்வன்மைக்குச் சிறந்த இலக்கியமாகத் திகழ்வன அருணகிரிநாதர் அருளிய திருப்பாடல்களேயாம்.

**வாக்கிற் கருணகிரி னாதவூ ரார்கனிவில்**
**தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு**
**நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனுர்**
**சொற்குறுதிக் கப்பரெனச் சொல்**

என வழங்கும் பழைய பாடல் அருணகிரிநாதரது சொல்வன்மையினை வியந்து போற்றுதல் காண்க.

தம் வாழ்நாள் முழுவதும் இயலிசைத் தமிழால் முருகப்பெருமானைப் போற்றுமியல்புடைய அருணகிரிநாதர் தாம் பாடிய பாடல்களில் சைவ சித்தாந்த நுண்பொருள்களையும் அப்பொருளுணர்வோடு தொடர்புடைய அருளநுபவங்களையும் குறித்துச்செல்லும் முறையினைக் கருதுங்கால் இவ் வாசிரியர் செவ்வேளாகிய முருகப்பெருமானையே சிவனெனத்தெளிந்து வழிபட்ட சைவசமயத்தவரென்பது நன்கு தெளியப்படும். முருகவேளைப் போற்றும் திருப்புகழ்ப் பாடல்களில் அவர்க்கு மாமனுகிய திருமால்செய்த அருட்செயல்கள் பலவற்றை இடையிடையே சிறப்பித்துப் போற்றி யுள்ளார். இப்பாடல்களைப் படிப்போர் இவர் திருமால் சமயத்தவரோ என எண்ணும் வகையில் இவையமைந்துள்ளன. இதனுல் இவ்வாசிரி யர்க்கு வைணவ முதலிய பிற சமயங்களில் வெறுப்பில்லையென்பது நன்கு விளங்கும். இங்ஙனம் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்னுந் தெளிவுடையராய் எவ்வுயிர்க்கும் நன்றே நினைந்து அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய் நின்ற அறுமுகச்செவ்வேளை இயலிசைத் தமிழாற்போற்றி யருள்பெற்ற பெரியார் அருணகிரிநாதராதலின் அவர் பாடிய பாடல்கள் யாவும் சமயவேற்றுமையின்றி எல்லோர்க்கும் பயன் தரும் சிறப்புடையனவாம். தமிழ் மக்களனைவரும் இயலிசை யிலக்கிய மாகவும் திருவருள் நூலாகவும் திகழும் திருப்புகழ்த் திருமுறையினைப் போற்றிப் பயன் பெறுவாராக.

## காலப்பிரமாணங்களின் விளக்கம்.

தாளத்தின் ஒரு அக்ஷரகாலத்திற்கு நான்கு மாத்திரை அல்லது நான்கு சுராக்ஷரங்கள் கொண்டது ஒரு களையாகவும், தாளத்தின் ஒரு அக்ஷர காலத்திற்கு இரண்டு மாத்திரை அல்லது இரண்டு சுராக்ஷரங்கள் கொண்டது ஒரு களையாகவும் பிரித்து எழுதப்பட்டுள்ளது.

இப்புத்தகத்தில் சுர தாளக் குறிப்புடன் எழுதி இருக்கும் திருப்புகழ் யாவும் மேற்கண்ட கால நிர்ணயத்தைக் கொண்டே எழுதப்பட்டுள்ளன..

## குறிகளின் அடையாளங்கள்.

, இக்குறி ஒரு மாத்திரை அல்லது ஒரு சுராக்ஷர காலத்தைக் குறிக்கும்.

; இக்குறி இரண்டு மாத்திரை அல்லது இரண்டு சுராக்ஷர காலத்தைக் குறிக்கும்.

— இக்குறி சுரங்களின் கீழ் அமைந்திருந்தால் மத்திம காலத்தைக் குறிக்கும்.

| இக்குறி ஒரு தாளத்தின் பூர்வாங்க முடிவைக் குறிக்கும்.

|| இக்குறி ஆவர்த்தத்தின் முடிவைக் குறிக்கும்.

. சுரங்களின் மேல் இம்மாதிரியான புள்ளிகள் போடப்பட்டிருந்தால் வன்மை நிலை (தாரஸ்தாயி) சுரங்கள் என்றும், சுரங்களின் கீழே புள்ளிகள் போடப்பட்டிருந்தால் மென்மைநிலை (மந்தரஸ்தாயி) சுரங்கள் என்றும் அறிக.

~~ இக்குறி சுரத்தின்மேல் போடப்பட்டிருந்தால் அந்த சுரத்தை அசைத்துப் பிடிக்கவும். இது கம்பிதம் என்னும் கமகமாகும்.

/ இது ஏற்ற ஜாருவைக் குறிக்கும்.

\ இது இறங்கு ஜாருவைக் குறிக்கும்.

## தாளாங்கக் குறியீடுகளின் விளக்கம்.

| | | |
|---|---|---|
| ◡ | அனுதிருதம் | ஒரு அக்ஷரம் |
| O | திருதம் | இரண்டு அக்ஷரம். |
| 8 | திருதவிராமம் | மூன்று அக்ஷரம். |
| \| | லகு | நான்கு அக்ஷரம். |
| ㄴ | குரு | எட்டு அக்ஷரம். |
| ஃ | புலுதம் | பன்னிரண்டு அக்ஷரம். |

சில அங்க தாளங்களில் லகுவிற்குப் பக்கத்தில் எண்கள் போட்டிருப்பதால் அதையனுசரித்து லகுவைப் பேதப்படுத்திக் கொள்ளவும்.

**குறிப்பு** :—ஸ்தாயியைக் காட்டும் புள்ளிகள் இப்புத்தகத்தில் சில இடங்களில் விடுபட்டிருக்கின்றன. பக்கங்களில் வரும் சுரங்களை அனுசரித்து அறிந்துகொள்ள வேண்டும்.

# பாடல் முதற்குறிப்பட்டவணை.

| பாட்டின் எண் | முதற் குறிப்பு | இராகம் | மேளம் | தாளம் | பக்க எண் |
|---|---|---|---|---|---|
| 1 | அகரமுமாகி | அரிகாம்போதி | 28 | மிசிரசாப்பு | 1 |
| 2 | அதலசேடனாராட | மணிரெங்கு | 22 | திசிர, துருவம் | 3 |
| 3 | அதிருங்கழல் | ரேகுப்தி | 15 | திசிர மட்டியம் | 5 |
| 4 | அபகார நிந்தை | சக்கரவாகம் | 16 | சதுச்ர, ஜம்பை | 6 |
| 5 | அருண மணிமேவு | சுத்த தன்யாசி | 20 | சோமாதி தாளம் | 7 |
| 6 | அருத்தி வாழ்வொடு | எதுகுல காம்போதி | 28 | சதுச்ர, அட | 9 |
| 7 | அல்லிவிழியாலும் | தோடி | 8 | திரிதிய, தாளம் | 10 |
| 8 | ஆதிமகமாயி | சங்கராபரணம் | 29 | திசிர, துருவம் | 12 |
| 9 | ஆரமணிவாரைப் | அடாணா | 29 | சச்சத்புடம் | 14 |
| 10 | ஆறுமுகம் | ரேகுப்தி | 15 | கண்ட சாப்பு | 16 |
| 11 | இமராஜனி | மலயமாருதம் | 16 | மிசிர, ஜம்பை | 18 |
| 12 | இயலிசையி | உசேனி | 22 | விஷமதாளம் | 20 |
| 13 | இருப்பவர் | வசந்தா | 17 | சதுச்ர, திருபுடை | 22 |
| 14 | இருவர் மயலோ | தீபகம் | 51 | மிசிர சாப்பு | 24 |
| 15 | உலக பசுபாச | பேகடா | 29 | கண்ட, திருபுடை | 26 |
| 16 | ஐங்கரனை | ஸ்ரீராகம் | 22 | சதுச்ர, திருபுடை | 28 |
| 17 | ஐந்து பூதமும் | பந்துவராளி | 51 | மிசிர, சாப்பு | 30 |

குறிப்பு :—மேற்குறித்த ஐம்பது பாடல்களும் காஞ்சிபுரம் இசைப்பெரும்புலவர் நயினாப் பிள்ளை யென்னும் சுப்பிரமணிய பிள்ளை அவர்களால் இசையமைக்கப் பெற்றவை.

| பாட்டின் எண் | முதற் குறிப்பு | இராகம் | மேளம் | தாளம் | பக்க எண் |
| --- | --- | --- | --- | --- | --- |
| 99 | வசனமிக | குந்தலவராளி | 28 | ஆதி | 196 |
| 100 | வஞ்சங்கொண் | பிலகரி | 29 | திசிர ; திருபுடை | 198 |
| 101 | வரதா மணிநீ | தேவமனோஹரி | 28 | சதுச்ர, திருபுடை | 201 |

51 முதல் 101 வரையுள்ள ஐம்பத்தொரு பாடல்களும் இசை மன்னர் சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை அவர்களால் இசையமைக்கப் பெற்றவை.

உ

# காஞ்சிபுரம் திருவாளர் நாயனாப் பிள்ளை என்ற சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் வரலாறு

## (இசைமன்னர்: சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை)

### முன்னோர்கள்

காஞ்சியில் சிவனுறை கோயில்கள் பலவுண்டு அவற்றுள் கச்சவபேச்சுரன் கோயிலில் வழி வழியாக இசைத்தொண்டு புரியும் குலத்தில் காமாக்ஷி அம்மையார் என்பவர் ஒருவர். அவ்வம்மையார் அக்காலத்தில் மேட்டுத்தெரு எனும் இடத்தில் இருந்து வந்ததால் மேட்டுக் காமாக்ஷி என்று அழைக்கப்பட்டார். இவருக்கு இரு புதல்வியர் இருந்தனர். மூத்த புதல்விக்கு தனுக்கோடி யென்றும் இளைய புதல்விக்கு அம்மா பொன்னம்மாள் என்றும் பெயர். இவர்கள் இளமையிலேயே இசைக் கலையை நன்கு பயின்று சியாமா சாத்திரிகளின் சிஷ்ய பரம்பரையினராய்த் திகழ்ந்தார்கள். தனுக்கோடியம்மாளும், அம்மா பொன்னம்மாளும் அக்காலத்தில் காஞ்சிபுரம் சகோதரிகள் என அழைக்கப்பட்டார்கள். சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இச்சகோதரிகள் வாய்ப்பாட்டில் சிறந்த பெண்மணிகளாக விளங்கினார்கள். இவர்கள் நல்ல இசைக்குடும்ப பரம்பரையினராயிருந்தமையினாலே அக்காலத்தில் பற்பல இசைவல்லுநர்கள் இவர்கள் வீட்டிற்கு வந்து பாடக் கேட்பதும் தாங்களும் பாடம் பண்ணுவதும் வழக்கமாக இருந்தது. மேலும் அவ்வம்மையார்கள் தங்களை இசைபாட அழைத்துப் பொருள் தரும் பெரியோர்களைக் காட்டிலும் இசைவல்ல வித்வான்களிடத்தில் பணிவும், நன்கு மதிப்பும் வைத்து வாழும் இயல்பினைப் பெற்றவராக விளங்கினார்கள்.

### தோற்றம்

மேற்கூறிய இரு அம்மையாருள் இளையவளான அம்மா பொன்னம்மாள் என்பவர் ஆங்கில நாள் 25—7—1887க்குச் சரியான சர்வசித்து ஆண்டு ஆடித் திங்களில் ஒரு ஆண் மகவை ஈன்றாள். இம்மகவே நமது நாயனாப் பிள்ளை ஆவார்கள். குழந்தைக்கு இளமையில் சுப்பிரமணியன் எனப் பெயர் வைத்தனர். ஈன்ற தாயும், பெரிய தாயாரும் (தனுக்கோடி) பாட்டியாரும் அக்குழந்தையை மிகச் செல்வமாக வளர்த்து வந்ததால் செல்வப் பெயராக நாயனா என அழைத்து வந்தனர். அப்பெயரே பிற்காலத்தில் அவருக்கு இயற் பெயர்போல் விளங்கிற்று. இவர் இளமையில் அக்காலம் உபமன்னீச்சுரர் கோயில் திண்ணைப்பள்ளிக்கூடத்தில் சண்முக உபாத்தியாயர் என்பவரிடம் கல்வி பயின்றார். ஆனால் கல்வியில் மனம் செலுத்தாது, அலைந்து திரிவது இவரது இயல்பாக இருக்க, இவரது அம்மான் வேலு முதலியார் என்பவர் அடிக்கடி இவரை கண்டிப்பது

வழக்கம். பிள்ளையவர்கள் உணவு அருந்தும் நேரங்களில் வீடு வருவதும் மற்ற நேரங்களில் சுற்றி அலைவதுமாக இருந்தார். ஆயினும் இயற்கை யாகவே தம் முன்னோர்கள் தொண்டாற்றி வரும் ஸ்ரீ கச்சவபேச்சுரர் ஆலயத்திற்கு நாள்தோறும் சென்று அங்குள்ள இஷ்டசித்தீச்சரப் பெரு மானை வணங்குவதும் இவருக்கு இயல்பான வழக்கமாகும்.

## இசைப் பயிற்சி

இவர் கிட்டத்தட்ட 20 வயது வரை எவ்வித கவலையுமின்றி முரட் டுத்தனமாகவும் உடற்பயிற்சி பெறும் இளைஞர்களுடன் சுற்றித் திரிந்தும் தானும் உடற்பயிற்சி பெற்று அதன்விளைவாக பலவாறாக காலங்கழித்து வந்தார். இவர் இவ்வாறு இருப்பதை இவரது பாட்டியார் காமாக்ஷி யம்மையார் தம் பெயரன் இதுபோல் அலைவது தகுதியன்று என்று நினைத்து தமது குடும்ப செல்வமாகிய இசைக்கலைபற்றியும் மற்றைய கல்வி பற்றியும் கவலை கொள்ளாது திரிந்து அலைவதை ஒருநாள் தெரிவிக் கத் தொடங்கினாள். அப்பொழுதே பிள்ளையவர்களுக்கு தன்னிலைமை உணர வாய்ப்பு ஏற்பட்டது. பின்னர் அவர்கள் தன் பாட்டியாரிடத்தில் எனக்கு இசைக்கலை கற்பித்தால் யானும் பாடுவேன் எனக் கூறினார். அதுகேட்ட அவரது பெரிய தாயார், நாயனா, நீயோ இதுகாறும் வீணாகப் பொழுது போக்கிவிட்டாய் இப்பொழுது பாடம் சொல்லிக்கொள்வது என்றால் உனக்கு ஒழுங்காக வராது. மேலும் நாங்கள் கற்பித்தால் நீ பணிவுடன் இருந்து கற்றுக்கொள்ள மாட்டாய். ஆனால் உனக்கு விருப் பம் இருந்தால் வேறு ஆசிரியரை அமர்த்துகின்றேன் எனக்கூற பிள்ளை யவர்களும் உடன்பட்டார்கள் அப்பொழுது. காஞ்சியில் வசித்துவந்த எட்டயபுரம் இராமச்சந்திர பாகவதரிடம் இவருக்கு பாடம் சொல்லும் படி பெரிய தாயார் கேட்டுக்கொண்டார். அவ்வாறே பாகவதர் அவர் களும் இவருக்கு (நாயனா) பாடம் கற்பித்து வந்தார். ஆனால் ஒருவகை யான அமைதியையும் பணிவையும் அறியாத பிள்ளையவர்களுக்கு பாகவ தரின் இசைமுறை அவ்வளவு எளிதாக அறியக்கூடாது போயிற்று. அந்நிலையில், பாகவதர் அவர்கள் வாயினால், நாயனா நீ இனி இத்துறை யில் ஈடுபட வேண்டாம். உனக்கு இசைக்கலை வராது எனக் கூறும்படி நேரிட்டுவிட்டது.

இத்தகைய நிலையில் பிள்ளையவர்கள் எவ்வாறேனும் இவ்விசைக் கலையை பயின்றுவிடுவதே சிறப்பாகும் என உறுதிகொண்டு, இறைவனை வணங்கி தான் வசித்து வந்த காஞ்சிபுத்தேரித் தெருவிற்கு மேற்கேயுள்ள திருக்கச்சியனேகதங்காவதம் எனும் திருத்தலத்தில் தனது நண்பர் சுப்பிரமணியம் என்பவரோடு சென்று, ஒவ்வொரு நாளும் விடியற்காலை யில் சாதகம் செய்து வந்தார். இவ்வாறு சில ஆண்டு செய்து வந்த உழைப்பினால் இவருக்கு இசைக்கலை தன்வயப்படத் தொடங்கிற்று.

பின்னர், பிள்ளையவர்களின் உறவினர் வாயிலாக வீரட்டேசர் கோயி லில் உள்ள ஒரு துறவி இசைக்கலையில் வல்லவர் என்பதைக் கேட்டு அத் துறவியை அணுகி அவரிடம் தனது கருத்தைத் தெரிவிக்க அவரும் இவ ரது குரலுக்கேற்ப சாதகம் செய்யும் முறையும் இசைக் கலையைத் தன் வயப்படுத்தும் தன்மையும் தாள முறைகளைக் கைக்கொள்ளும் முறையும் பல்லவி பாடும் திறனையும் நாளடைவில் நன்கு எடுத்துக் கூறினர். முன் னர் துறவி பாடுகிறார் என்பதை பொருட்படுத்தாது இருந்த பிள்ளை யவர்கள் நாளடைவில் கலையின் வழியறிந்து இடைவிடாத உழைப்பினால் தங்கள் தாய்மார்கள் பாடிவரும் பாடல்களையெல்லாம் தனது குரலுக் கேற்ப அழகுபடுத்திப் பாடி வந்து அவற்றில் வெற்றியுங்கண்டார். அனேகதங்காவதச் சிவனருளையும் துறவியின் கருணையையும் தனக்கு இசைக்கலை வந்த எளிமையையும் இவர் பிற்காலத்தில் தனது மாணவர் களிடையே எடுத்துக் கூறுவதுண்டு.

### பெரும்புலவரானது

பிள்ளையவர்கள் அக்காலங்களில் நடந்த இசைக் கச்சேரிகளையும் நன்கு கேட்டு தன் மனப்பண்பை நன்கு வளர்த்து தனது குடும்ப சொத் துக்களாம் சியாமாசாத்திரியார் கீர்த்தனங்களையும் நன்கு பாடிப் பாடி சாதனை செய்துவந்தார். பின்னர் வாலாஜபேட்டையார் ஸ்ரீ தியாகராஜர் கீர்த்தனங்களை பாடம் செய்த முறையில் சென்னை ஜலதரங்க வித்வான் ரமணீய செட்டியார் அவர்களை அணுகி அவர்கள் அறிந்த பலவேறு தியாகராஜ கீர்த்தனங்களை தான் ஒன்று சேர்த்து அவைகட்கெல்லாம் நன்கு புதிய மெருகு கொடுத்து வகைசெய்து உழைத்து வந்தார். இயற்கையில் இவர் தாளத் தொடர்பாக பல அரிய கருத்துக்களை உணர்ந்து வந்தபோது இவருக்கு மன்னார்குடி திரு. பக்கிரியாப் பிள்ளை அவர்களின் நட்பு ஏற்பட்டது. அதன் பின்னரே இவரது திறமை நன்கு செழித்து வளரத் தொடங்கியது எனலாம்.

முதன் முதலில் இவர் பாடுவதும் பக்கிரியாப் பிள்ளை அவர்கள் கொனிப்பித்தலுமாக இருந்தபோது இவருக்கு பக்கக் கருவிகள் வாசிப் பதற்கு அக்காலப் புலவர்கள் இடந்தரவில்லை. இருந்தபோதிலும் தனது உழைப்பைக் கைவிடாது நாளடைவில் தனது பாட்டை செவ்விய முறை யில் அமைத்து கேட்போருக்கு புத்துணர்ச்சியை உண்டாக்கும் வகையில் கொண்டுவந்துவிட்டார். அதன் பின்னர் தன்னிடத்தில் பாடம் கற்றுக் கொள்ள வந்த சேத்தூர் சுந்தரேச பட்டர் என்பவரை பிடில் வாசிக்கவும் அகிலேச்சுவர ஐயர் என்பவரை மத்தளம் வாசிக்கவும் ஏற்பாடு செய்து சில காலம் செல்ல, நாளடைவில் அக்காலம் பக்க வாத்தியங்களில் பிடில் கோவிந்தசாமி பிள்ளையவர்கள், மத்தளம் அழகுநம்பியா பிள்ளையவர்கள், கஞ்சிரா தக்ஷணாமூர்த்திப் பிள்ளையவர்கள், கடம் சுந்தரம் ஐயரவர்கள், மத்தளம் பழனி முத்தையா பிள்ளையவர்கள், டோலக் வேணு செட்டியார் அவர்கள், முகர்சிங் சீதாராம ஐயரவர்கள் என்றின்ன

பெரியோர்களெல்லாம் பக்கவாத்தியம் வாசிக்கத் தொடங்கியபோது யாவரையும் வியப்படையும்படி தன் திறமையைக் காட்டிப் பிள்ளையவர்கள் இசைப் பெரும் புலவராகத் திகழ்ந்தார்கள்.

## இசையுலகுக்குத் தந்த பயன்

தனது முயற்சியினால் எத்தனையும் உழைத்துப் பெறலாம் என்பதை பிள்ளையவர்கள் முதன் முதலில் இசைக் கலைவழி உலகுக்கு எடுத்துக் காட்டினார்கள். பெரியோர்களின் பாடல்களை எவ்வாறு கொண்டு அவைகளை எந்த முறையில் கைக் கொண்டால் அதாவது தனது குரலுக்கு எவ்வகையில் அதனை ஏற்றுப் பாடினால் அதற்கு நல்ல மெருகு அளிக்கலாம் என்பதை பிள்ளையவர்கள் ஒருவரே உலகில் வழி வகுத்தார் என்றால் அது மிகையாகாது. இது அவர், வெளிவராத ஒருவரும் பாடாத பல அரிய உருப்படிகளை பண்புபடுத்திப் பாடிக் காட்டியதே பெரிய சான்றாகும். அதோடன்றி அக்காலங்களில் இசைப் புலவர்கள் பலருக்கும் அரிதாக இருந்த திருப்புகழை பிள்ளையவர்கள் ஒருவரே பல்வேறு வகையாக கைக் கொண்டு பாடி, கேட்போரை மெய்மறக்கும் நிலையில் அமைத்தார் என்றால் அவர் இசையுலகிற்குத் தந்த பயன் இதனையன்றி வேறேதேனும் உளதோ! தேவாரப் பாடல்களில் தொண்டரஞ்சு, சிறையாரும், உற்றுமை சேர்வது போன்ற பாடல்கள் கச்சேரி மேடையில் அழகுபெற உலாவியதும் பிள்ளையவர்களாலேயேதான் என்பதையாவரும் அறிவர். ஆகவே அவர்களால் இசையுலகிற்குத் தந்த பயன் அளவிடற்கரிதாகும்.

## முடிவு

பிள்ளையவர்கள் தான் மேம்பாடடைந்த காலம் முதற்கொண்டே தன்னிடம் பல மாணவர்களை வைத்து அவர்களுக்குத் தன் வழியில் அக் கலையை நன்கு பயிற்றுவித்தார். உழைப்பினில் வாரா உறுதியும் உளவோ, எனும் ஆன்றோர் வாக்கிற்கிணங்க திரு. பிள்ளையவர்கள், நல்ல இசைக் கலை பயின்ற குடும்பத்தில் பிறந்தும், இளமையில் சில ஆண்டுகள் கடந்து நல்ல வயதில் உழைத்து இசைக் கலையை தன்வயப்படுத்தி தான் பாடிய முறை தனக்கே உரியதெனக் காட்டி விளங்கி பேறும் புகழும் பெற்றதுடன் ஆன்ம உணர்வினைத் தருவதான அருணகிரியார் வாக்குகளாய கந்தரந்தாதி அனுபூதி போன்ற நூல்களை இடைவிடாது படித்து இன்புற்றும், காஞ்சியில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுக்கு ஆண்டுதோறும் விழா நடத்தியும், தன் திறமை எத்துணை பெரிதாயினும் பிறர்பால் கருணையும், யாவராயினும் பாடினாலும் கருவி இசைத்தாலும் அவ்வவற்றில் உள்ள சிறந்த பகுதிகளைக் கைக் கொண்டும் தான் உழைத்துச் செய்யும் முறைகளை சிறந்த புலவர்களாயினும் கண்டு அஞ்சத்தக்க நிலையில் செய்து காட்டிய நமது பிள்ளையவர்கள் இறுதிக் காலம் வரை இறைவனை மறவாது இசையைக் கைவிடாது இருந்து தனது 47-ம் வயதில் அதாவது 2—5—1934-ம் ஆண்டில் இவ்வுலகில் இருந்து மறைந்தார்கள். ஆயினும் அவரது புகழ் தமிழ்நாடெங்கும் இசை உலகு எங்கும் நின்று நிலவுகின்றது.

உ

அருணகிரிநாதர் பாடியருளிய

# திருப்புகழ்

## பழமுதிர்சோலை

இராகம் : அரிகாம்போதி.
தாளம் :—மிசிரசாப்பு

28-வது மேளம்

ஆ. ச ரி க ம ப த நி ச்
அ. ச நி த ப ம க ரி ச

அகரமுமாகி யதிபனுமாகி யதிகமுமாகி அகமாகி—
அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி அவர்மேலாய்;
இகரமுமாகி யெவைகளுமாகி யினிமையுமாகி வருவோனே—
இருநிலமீதி லெளியனும்வாழ எனதுமுனோடி வரவேணும்;
மகபதியாகி மருவும்வலாரி மகிழ்களிகூரும் வடிவோனே—
வனமுறைவேட னருளியபூசை மகிழ்கதிர்காம முடையோனே;
செககணசேகு தகுதிமிதோதி திமியெனஆடு மயிலோனே—
திருமலிவான பழமுதிர்சோலை மலைமிசைமேவு பெருமாளே.

மிசிரசாப்பு, அங்கப்பிரத்தார முறைப்படி மாறுதல் இருப்பதால், வீச்சு 8 மாத்திரை, தட்டு 6 மாத்திரையாகப் போட்டுக்கொள்ளவும்.

1 ச்ா நீ தா பா = பா ; தா | நீ தா பா மா = கா ; மா ||
அ க ர மு மா கி | ய தி ப னு மா கி

தா பா மா கா = ரீ ; கா | பா மா கா ரீ = ம க க ரி சா ||
ய தி க மு மா கி | அ க மா . . . . . கி

2 சா ரீ கா மா = பா ; பா | மா பா தா நீ = ச்ா ; ச்ா ||
அ ய னெ ன வா கி | அ ரி யெ ன வா கி

ர்ீ க்ா ம்ா க்ா = க்ா ர்ீ ச்ா | ர்ீ ச்ா நீ தா = பா தா நீ ||
அ ர னெ ன வா . கி | அ வர் மே . லா . ய்

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# பொது

**இராகம்: மணிரெங்கு**
**தாளம்:—திசிர. துருவம்.**

**22-வது மேளத்திற் பிறந்தது.**

ஆ. ச ரி ம ப நி ச்
அ. ச நி ப ம க ரி ச

அதல சேட னாட அகிலமேரு மீதாட
அபின காளி தாடை அவளோடன் –
றதிர வீசி வாதாடும் விடையிலேறு வாராட
அருகு பூத வேதாளம் அவையாட;
மதுர வாணி தாடை மலரில்வேத னாட
மருவு வானு ளோராட மதியாட –
வனச மாமி யாராட நெடியமாம னாட
மயிலு மாடி நீயாடி வரவேணும்;
கதைவி டாத தோள்வீம னெதிர்கொள் வாளி யால்நீடு
கருத லார்கள் மாசேனை பொடியாகக் –
கதறு காலி போய்மீள விஜய னேறு தேர்மீது
கனக வேத கோடூதி அலைமோதும்;
உததிமீதி லேசாயு முலகமூடு சீர்பாத
உவண மூர்தி மாமாயன் மருகோனே –
உதய தாம மார்பான ப்ரபுடதேவ மாராஜன்
உளமு மாட வாழ்தேவர் பெருமாளே.

திஸிர துருவத்தின் காலப் பிரமாணம் அக்ஷரம் ஒன்றுக்கு 2 மாத்திரை ஓர் கஃயாகக்கொண்டது. அங்க தாளமாகவும் போட்டுக்கொள்ளலாம்.

× ஷ தாளம் கண்டப் பிரஸ்தார முறைப்படி அங்க பேத மடைந்திருக்கின்றது.

× ।3 . ।3 . O . ।3

| | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | ச்ா | நீ | பா | \| | பா | ; | பா | \| | மா | பா | \| | பம | கா | ரீ | ‖ |
| | அ | த | ல | | சே | | ட | | ை | . | | ரா | . | ட | |
| | ரீ | பா | மா | \| | \கா | ; | ரீ | \| | சா | ரீ | \| | சா | ; | சா | ‖ |
| | அ | கி | ல | | மே | | ரு | | மீ | . | | தா | | ட | |
| | சா | ரீ | மா | \| | பா | ; | பா | \| | பா | ; | \| | நீ | மா | பா | ‖ |
| | அ | பி | ன | | கா | | ளி | | தா | | | ை | . | ட | |
| | மா | பா | ; | \| | /நீ | ; | ; | \| | ச்ா | நீ | \| | மா | பா | நீ | ‖ |
| | அ | வ | | | ளோ | | | | டன் . | | | . | . | . | |

இவ்வாறே ஏஃனய அடிகஃளயும் பாடிக்கொள்ளவும்.

# குன்றுதோருடல்

இராகம்: ரேகுப்தி　　ஆ. சரிகபதச்　　15-வது மேளத்திற் பிறந்தது
தாளம் :—திசிர ; மட்டியம் |. களைச் சவுக்கம்　　அ. ச்தபகரிச

அதிருங் கழல் பணிந்துன்　　அடியேனுன் —
　அபயம் புகுவ தென்று　　நிலைகாண ;
இதயந் தனி லிருந்து　　க்ருபையாகி —
　இடர்சங் கைகள் கலங்க　　அருள்வாயே ;
எதிரங் கொருவ ரின்றி　　நடமாடும் —
　இறைவன் தனது பங்கி　　லுமைபாலா ;
பதி யெங்கிலு மிருந்து　　விளையாடிப் —
　பலகுன் றிலும மர்ந்த　　பெருமாளே .

1　சா ரீ கா ; கா கா | கா கா ; கா | கா பா/தா ; பா ; ||
　அ தி ருங் க ழல் ப ணி ந் து ன் அ டி யே னுன்
　கா பா கா ; கா கா | கா ரீ ; ரீ | சா ரீ கா ரீ சா ; ||
　அ ப யம் பு கு வ தெ ன் று நி லை கா . ண

2　ரீ கா பா ; பா பா | பா/தா ; பா | பா தா ச்ா ; ச்ா ; ||
　இ த யந் த னி லி ருந் து க்ரு பை யா கி
　தா ச்ா தா ; தா தா | ச்ா\தா ; பா | தா பா கா ரீ சா ; ||
　இ டர் சங் கை கள் க லங் க அ ருள் வா . யே

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருவாவிநன்குடி

இராகம் : சக்கரவாகம் — ஆ. ச ரி க ம ப த நி ச்

துச்ர ஜம்பை |. களைச் சவுக்கம் — அ. ச் நி த ப ம க ரி ச — 16-வது மேளம்

அபகார நிந்தைபட் டுழலாதே —
அறியாத வஞ்சரைக் குறியாதே ;
உபதேச மந்திரப் பொருளாலே —
உனைநானி னைந்தருட் பெறுவேனே ;
இபமா முகன்தனக் கிளையோனே —
இமவான் மடந்தையுத் தமிபாலா ;
செபமாலை தந்தசற் குருநாதா —
திருவாவி னன்குடிப் பெருமாளே .

1 ; நி த பா ; மா கா ரீ சா | கா மா | பா ; பா ; ||
அ ப கா ர நிந் தை பட் | டு ழ | லா தே
; கம கம பா பா மா / நீ தா | தநி ச்ா | ; நி ச நி த ப ம ||
அறியா. . த வஞ் ச ரைக் | கு . றி | யா . . . தே .

2 பத — நித நீ ; நீ ச்ா ச்ா ச்ா | நீ ச்ா | ச் நித நிச்ா ; ||
. . உபதே ச மந் தி ரப் | பொ ரு | ளா . . . லே
; த நி ச்ா ; நிச் நித பா பா | ப மபத | நி த ப ம க ரி கம || பத =
உ னை நான் நி . னைந் தருட் | பெ . . . | று . . . வே . . . னே- =

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## திருச்செந்தில்

இராகம்: சுத்த தன்யாசி
சோமாதி தாளம்

ஆ. ச கா ம ப நீ சா
அ. ச் நி ப ம க ச

20-வது மேளத்திற் பிறந்தது

அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபிநவ விசால பூரண
அம்பொற் கும்பத் தனமோதி —
அளிகுலவு மாதர் லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய
அங்கைக் கொங்கைக் கிதமாகி ;
இருணிறைய மோதி மாலிகை சருவியுற வான வேளையில்
இழைகலைய மாத ரார்வழி
இன்புற் றன்புற் றழியாநீள் —
இரவுபகல் மோகனுகியெ படியில்மடி யாமல் யானுமுன்
இணையடிகள் பாடி யாடிட
நெஞ்சிற் செஞ்சொற் றருவாயே ;
தருணமணி யாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர் மறையி னுதி யாகிய
சங்கத் துங்கக் குழையாளர் —
தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு
துண்டிட் டண்டர்க் கருள்கூரும் ;

செருமுதலை வாயின் மேவிய யதிமதக போல மால்கரி
　　தெளிவினுடன் மூல மேயென
　　முந்தச் சிந்தித்　　　　　　　　　தருள்மாயன் -
திருமருக சூரன் மார்பொடு சிலையுருவ வேலை யேவிய
　　செகதலவி யாச சீர்திகழ்
　　செந்திற் கந்தப்　　　　　　　　　பெருமாளே.

|　　　　　　ᒪ　　　　　|　　　　　ᒪ

1　கா கா சா கா | மா பா; பா பா; பா பா | நீ பா பா பா | பாச்ா; ச்ா/க்ா; ச்ாச்ா |
அ ரு ண ம　ணிமே வு பூ ஷித　ம்ரு க ம த　ப டீ ர லே ப ன

|　　|　　|　　0　　0

பா ச்ா நீ ச்ா | பா/ச்ா நீ பா | பா; மா மா | பா ; | ச்ா ; |
அ பி ந வ　வி சா . ல　பூ ர ண　அ ம்　பொற்

　　　　உ

நீ ; பா ;　மா கா கா கா/பா மா கா சா ||
கு ம் ப த்　த ன மோ . . . தி .

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

சோமாதி தாளம் அபூர்வ தாளத்தில் ஒன்றாகும். இதனை, இரண்டு மாத்திரை ஓர் களையாகக் கொண்ட காலப்பிரமாணப்படி அங்க தாளமாகப் போட்டுக்கொள்ளவும்.

# பழநி

**இராகம்: எதுகுல காம்போதி.** 
**தாளம்: சதுச்ர அட.**

ஆ. ச ரி ம ப த ச்
அ. ச் நி த ப ம க ரி ச

**28-வது மேளத்திற் பிறந்தது**
**1. களைச் சவுக்கம்**

அருத்தி வாழ்வொடு தனகிய மனைவியு முறவோரும்—
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்;
தரித்த வூருமெ யெனமன நினைவது நினையாதுன்—
தனைப்ப ராவியும் வழிபடு தொழிலது தருவாயே;
எருத்தி லேறிய இறையவர் செவிபுக வுபதேசம்—
இசைத்த நாவின இதணுறு குறமக விருபாதம்,
பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை—
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே.

1 பா பா ; பா பா ; பா பா | மா பா தா ச்ா தா பா மா கா | சா ரீ மா கா | ரீ கா ரீ ; ||
அ ரு த்தி வா ழ் வொ டு த ன கி ய ம னை வி யு மு ற வோ . . . ரு ம்

ரீ / கா ; ரீ ரீ ; ரீ ரீ | மா தா பா மா கா பா மா கா | ரீ கா சா ; | ; ; சா ; ||
அ டு த் த பே ர் க ளு மி த மு று ம க வொ டு வ ள நா டு ம்

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## வள்ளிமலை

இராகம்: தோடி
திரிதிய தாளம்

8-வது மேளம்

ஆ. சரிகமபதநிச்
அ. ச்நிதபமகரிச

அல்லி விழியாலு முல்லை நகையாலும்
அல்லல்பட ஆசைக் கடலீயும்—
அள்ளவினி தாகி நள்ளிரவு போலு
முள்ள வினையாரத் தனமாரும்;
இல்லுமிளை யோரு மெல்ல அயலாக
வல்லெருமை மாயச் சமனும்—
எள்ளி யெனதாவி கொள்ளை கொளுநாளில்
உய்யவொரு நீபொற் கழல்தாராய்;
தொல்லை மறைதேடி யில்லையெனு நாதர்
சொல்லு முபதேசக் குருநாதா—
துள்ளி விளையாடு புள்ளியுழை நாண
வெள்ளிவன மீதுற் றுறைவோனே;
வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லைவடி வேலைத் தொடுவோனே—
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே.

திரிதீய தாளம் 108 தாளங்களில் ஒன்ருகும். இதனை இரண்டு மாத்திரை ஒரு களையாகக்கொண்ட காலப் பிரமாணப்படி அங்க தாளமாகப் போடவேண்டும். இத்திருப்புகழை ஆதி தாளத்திலும் பாடலாம்.

ஷ திரிதீய தாளமானது கண்டப்பிரஸ்தார முறைப்படி அங்கபேதம் அடைந்திருக்கின்றது.

0    8    8    0    8    8

1 பா ; | தா பா தா | பா ; பா | பா ; | தா பா / நீ | \ தா ; பா |
அல் வி வி ழி யா லு முல் லை ந கை யா லும்

மா ; | பா மா பா | கா ; ரீ | சா ரீ | கா ; ; | மா ; ; |
அல் லல் ப ட ஆ சைக் க ட லீ யும்

சா ; | ரீ கா மா | பா ; தா | நீ ; | தா பா மா | கா ; ரீ |
அள் ள வி னி தா கி ந ள் ளி ர வு போ லும்

சா ; | பா மா பா | கா ; ரீ | சா ரீ | சா ; ; | சா ; ; |
உள் ள வி னை யா ரத் த ன மா ரும்

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## ஊதிமலை

இராகம்: சங்கராபரணம் — ஆ. சரிகமபதாநிச் — 29-வது மேளம்

தாளம், திசிர: துருவம் — அ. ச்நிதபமகரிச

ஆதிமக மாயி யம்பை தேவிசிவ னார்மகிழ்ந்த
ஆவுடைய மாதுதந்த குமரேசா —
ஆதரவ தாய்வருந்தி யாதியரு ணேசரென்று
ஆளுமுனையே வணங்க அருள்வாயே ;
பூதமது வானவைந்து பேதமிட வேயலைந்து
பூரணசி வாகமங்க ளறியாதே —
பூணுமுலை மாதர்தங்கள் ஆசைவகை யேநினைந்து
போகமுற வேவிரும்பு மடியேனை ;
நீதயவ தாயிரங்கி நேசவரு ளேபுரிந்து
நீதிநெறி யேவிளங்க வுபதேச —
நேர்மைசிவ னார்திகழ்ந்த காதிலுரை வேதமந்த்ர
நீலமயி லேறிவந்த வடிவேலா ;
ஓதுமறை யாகமஞ்சொல் யோகமது வேபுரிந்து
ஊழியுணர் வார்கள் தங்கள் வினைதீர —
ஊனுமுயி ராய்வளர்ந்து ஓசையுடன் வாழ்வுதந்த
ஊதிமலை மீதுகந்த பெருமாளே.

திஸிர துருவம் அங்கப்பிரத்தாரத்தின் கிரமப்படி மாறுதல் அடைந்திருக்கின்றது. ஷ தாளத்தின் காலப்பிரமாணம் இரண்டு மாத்திரை ஓர் களையாகக்கொண்டது.

1 மா கா | மா பா பா | பா ; பா | பா ; பா ||
ஆ . இ ம க மா யி யம் பை
பா தா | நீ ச்ா ச்ா | ச்ரி தா பா | பம மா கா ||
தே . வி சி வ ஞர் . . ம கிழ்ந் . த
கா மா | பா மா கா | ரிகரிபமக | மககரிசா ||
ஆ . வு டை ய மா . . . து . தந் . . . த
சா ரீ | கா ; ; | ; ; ; | கமபமகரி ||
கு ம ரே சா . . . . .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## திருவானைக்கா

இராகம்: அடாணு
தாளம், சச்சத்புடம்

ஆ. சரிமபநிச்
அ. ச்நிச்தாபமபகாமரிச

29-வது மேளத்திற் பிறந்தது

ஆரமணி வாரைப் பீறியற மேலிட்
டாடவர்கள் வாடத் துறவோரை
ஆசைமட லூர்வித் தாளுமதி பாரப்
பாளித படீரத் தனமானார்
காரளக நீழற் காதளவு மோடிக்
காதுமபி ராமக் கயல்போலக்
காலனுடல் போடத் தேடிவரு நாளிற்
காலை மறவாமற் புகல்வேனோ
பாரடைய வாழ்வித் தாரபதி பாசச்
சாமளக லாபப் பரியேறிப்
பாய்மதக போலத் தானெடிக லாமுற்
பாடிவரு மேழைச் சிறியோனே
சூரர்புர சூறைக் காரசுரர் காவற்
காரஇள வேனற் புனமேவுந்
தோகைதிரு வேளைக் காரதமிழ் வேதச்
சோதிவளர் காவைப் பெருமானே.

சச்சத் புடம் பஞ்ச தாளங்களில் ஒன்ருகும். இதனை இரண்டு மாத்திரை ஒர் களையாகக் கொண்ட காலப் பிரமாணப்படி அங்கதாளமாகப் போடவேண்டும்.

ட          ட          |          உ

ரீ ; ச்ா ச்ா நீ\தா ; தா | தா ; நீ பா மா பா ; பா | பா ; நீ மா | பா ச்ா ; ச்ா நீ ச்ா\தா ; ரீ ; சா ; ||
ஆ ர ம ணி வா ரைப் | பீ றி ய ற மே லிட் | டா ட வர் | கள் வா டத் து ற வோ . ரை ||

நீ ச்ா ரீ சா ரீ/கா ; ரீ | ச்ா ; ரீ ச்ா ரீ சா நீ தா | பா ; தா நீ | ச்ா/ரீ ; ச்ா ச்ா நீ\தா ; ரீ ; ச்ா ; ||
ஆ . சை ம ட லூர் வித் | தா ளு ம தி பா . ரப் | பா ளி த | ப டீ ரத் த ன மா . ஞர் ||

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# பழநி

இராகம்: ரேகுப்தி
தாளம், கண்ட சாப்பு

ஆ. சரிகபதச்
அ. ச்தபகரிச

15-வது மேளத்திற் பிறந்தது

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி –
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும் ;
ஏறுமயில் வாகனகு காசரவ ணாளனது
ஈச என மானமுன தென்றுமோதும் –
ஏழைகள் வியாகுலமி தேதெனவி னவிலுனை
யேவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ ;
நீறுபடு மாழைபொரு மேனியவ வேலஅணி
நீலமயில் வாகவுமை தந்தவேளே –
நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா ;
சீறிவரு மாறவுண னவியுணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ் –
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே.

; சா = ரி கா கா | பா ; = பா தா பா | ; கா = பா தா பா | க க த ப = க ப கரி சா ||
ஆ று மு கம் ஆ று மு கம் ஆ று மு கம் ஆ . று . மு . கம் . .

; சா = சா சா சா |\ தா ; = சா தா பா | சா ரீ = கா ; கா | பா ; = ; ; ; ||
ஆ று மு கம் ஆ று மு கம் என்று பூ . தி

; கா = கா பா பா |\ கா ; = தா பா தா | ; கா = பா தா ச்ா | ச்ா ; = ச்ா ச்ா ச்ா ||
ஆ க ம ணி மா த வர் கள் பா த ம லர் சூ டு ம டி

ச்ா ரீ = க்ா ரீ ச்ா | ச்ா ; = தச் தா பா | கா பா = தா ; ; | க ப தப = க ப கரி சா ||
யா ர் கள் ப த மே து . ணை ய தென்று நா . . . . ளும் . . .

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## திருவருணை

**இராகம்: மலயமாருதம்**
**தாளம், மிசிர ஜெம்பை**

ஆ. சரிகபதநிச்
அ. ச்நிதபகரிச

**16-வது மேளத்திற் பிறந்தது**
**1. களச் சவுக்கம்**

இமராஜனி லாவதெ றிக்கும் கனலாலே —
இளவாடையு மூருமொ றுக்கும் படியாலே ;
சமராகிய மாரனெ டுக்குங் கணையாலே —
தனிமானுயிர் சோருமதற்கொன் றருள்வாயே ;
குமராமுரு காசடி லத்தன் குருநாதா —
குறமாமக ளாசைத ணிக்குந் திருமார்பா ;
அமராவதி வாழ்வம ரர்க்கன் றருள்வோனே —
அருணைபுரி வீதியி னிற்கும் பெருமாளே.

கா கா பா ; தா நீ சா ; நீ தா பா ; பா ; | கா பா | கா ரீ சா ; ||
இ ம ரா ஜ னி லா வ தெ றிக் கும் க ன லா . லே

தா நீ சா ; சா ரீ கா ; கா கா பா ; பா ; | தா நீ | ச்ா ; ச்ா ; ||
இ ள் வா டை யு மூ ரு மொ றுக் கும் ப டி யா லே

க்ா ரீ ச்ா ; ச்ா நீ சா ; நீ தா தா பா தா ; | நீ தா | தா பா கா ; ||
ச ம ரா கி ய மா ர னெ டு . க்குங் க ணை யா . லே

சா ரீ கா பா தா நீ சா ; நீ தா பா ; கா ; | தா பா | கா ரீ சா ரீ ||
த னி மா . னு யிர் சோ ரு ம தற் கொன் ற ருள் வா . யே .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## திருச்செந்தில்

இராகம்: உசேனி
விஷம தாளம்

ஆ. ச ப ம ப நி தா நி ச்
அ. ச் நி த ப ம க ரி ச

22-வது மேளத்திற் பிறந்தது

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி—
    இரவுபகல் மனது சிந்தித் துழலாதே;
உயர்கருணை புரிய மின்பக் கடல்மூழ்கி—
    உனையெனது ளறியு மன்பைத் தருவாயே;
*மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்—
    வனசகுற மகளை வந்தித் தணைவோனே;
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே—
    கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

---

*மயில் தகர் கல் இடையர் = மயிலும் ஆடும் சிறைந்த குன்றிலே வாழும் வேடுவர்.

விஷம தாளம் என்பது 108 தாளங்களில் ஒன்ருகும். ஷ தாளம் அங்கப் பிரத்தாரமுறைப்படி பேதமடைந்திருக்கின்றது என்பதை அறியவும். இத் திருப்புகழைக் கண்டதிருபுடையிலும் பாடலாம். விஷமதாளத்தின் காலப்பிரமாணம் இரண்டு மாத்திரை ஓர் கலையாகக்கொண்டது.

○    ૪    ○    ૪    ┶

கா ரீ | சா சா சா | சா/நீ | தா பா ; | பா ; பா பா நி தா ம பா ; ||
இ ய வி சை யி லு சி த வஞ் சிக் க யர் வா . . . கி

மா பா | நீ தா நீ | ச்ா நீ | தா பா ; | பா ; மா பா பம கா ரீ சா ||
இ ர வு ப கல் ம ன து சிந் தித் து ழ லா . . . தே

மா பா | நீ தா நீ | ச்ா ச்ா | ச்ா ச்ா ; | ச்ா ; நீ ச்ா க்ரி ரி ச் நிதபம ||
உ யர் க ரு ணை பு ரி யு மின் பக் க டல் மூ . . . ழ்கி . . .

பா பா | ச்ா நீ ச்ா | பா/நீ | தா பா ; | பா ; மா பா ச் நி த ப ம க ரி ச ||
உ னை யெ ன து எ றி யு மன் பைத் த ரு வா . . . யே . . .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## திருத்தணி

இராகம் : வசந்தா
தாளம்; சதுச்ர திருபுடை, கண்டகதி

ஆ. ச க ம த நி ச்
அ. ச் நி த ம க ரி ச

17-வது மேளத்திற் பிறந்தது

இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவ
　　ரிடுக்கினை யறுத்திடு　　　　மெனவோதும் —
இசைத்தமிழ் நடத்தமி ழெனத்துறை விருப்புட
　　னிலக்கண இலக்கிய　　　　கவிநாலுந் ;

தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் மிகச்சக
　　தலத்தினில் நவிற்றுத　　　　லறியாதே —
தனத்தினில் முகத்தினில் மனத்தினி லுருக்கிடு
　　சமர்த்திகள் மயக்கினில்　　　　விழலாமோ ;

கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்தியல்
　　களிப்புட னௌித்தெய்த　　　　மதவேளைக் —
கருத்தினில் நினைத்தவ னெருப்பெழ நுதற்படு
　　கனற்கணி லெரித்தவர்　　　　கயிலாயப் ;

பொருப்பினி லிருப்பவர் பருப்பத வுமைக்கொரு
　　புறத்தினை யளித்தவர்　　　　தருசேயே —
புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி
　　பொருப்பினில் விருப்புறு　　　　பெருமாளே.

காலப்பிரமாணம் ஐந்துமாத்திரை ஓர் களையாகக்கொண்டது.

; ; ச . சா ச ச ச . மா ம ம க . மா த த த | நீ ம த த நி ச் ச் ச் | ரி ச நீ . த ம த நீ ||
இ ரு ப் ப வல் தி ருப் புகழ் வி ருப் பொடு ப டிப் ப வ ரிடுக்கினை யு றுத்திடு மெனவோ .

ச்ா ; நி . சா நி த த நீ த ம த மா ம ம ம | கா க க க மா த நி ச் | நீ த மா க ம க ரி ச ||
தும் இ சை த் த மிழ் நடத் த மி ழெனத்து றை வி ரு ப் புடனிலக் க ண இ ல க் கி ய க வி நா . .

கரி சநி =
லும் . .

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருவருணை

**இராகம் : தீபகம்** | ஆ. சகமபதபச் | **51-வது மேளத்திற் பிறந்தது**
**தாளம், மிசிர : சாப்பு** | அ. ச்நிதநிபகபமகரிச

இருவர் மயலோ அமளி விதமோ
எனென செயலோ — அணுகாத —
இருடி அயன்மா லமர ரடியார்
இசையு மொலிதா — னிவைகேளா(து);

ஒருவ னடியேன் அலறு மொழிதான்
ஒருவர் பரிவாய் — மொழிவாரோ —
உனது பதந்தூள் புவன கிரிதா
னுனது கிருபா — கரமேதோ;

பரம குருவா யணுவி லசைவாய்
பவன முதலா — கியபூதப் —
படையு முடையாய் சகல வடிவாய்
பழைய வடிவா — கியவேலா;

அரியு மயனோ டபய மெனவே
அயிலை இருள்மேல் — விடுவோனே —
அடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருண கிரிவாழ் — பெருமாளே.

சா கா மா = பா தா பா ; | பா தா பா = தா பா சா ; ||
இ ரு வர் ம ய லோ அ ம ளி வி த மோ

ரீ ச்ா நீ = தா நீ பா ; | கா பா மா = க்ா ரீ சா ; ||
எ ன ன செ ய லோ அ ணு . கா . த

பா தா பா = ச்ா ச்ா ச்ா ; | ச்ா க்ா ம்ா = க்ா ரீ ச்ா ; ||
இ ரு டி அ யன் மா ல ம ர ர டி யா ர்

ச்ா நீ தா = தா நீ பா ; | கா பா மா = கா ரீ சா ; ||
இ சை யு மொ லி தா னி வை . கே . ளா

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# பழநி

இராகம்: பேகடா — ஆ. சகரிகமபதபச் — 29-வது மேளத்திற் பிறந்தது
தாளம்; கண்ட திருபுடை — அ. ச்நிதபமாகரிச — 1. களைச் சவுக்கம்

உலகபசு பாச தொந்த மதுவான —
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்;

மலசலசு வாச சஞ்ச லமதாலென் —
மதிநிலை கெடாம லுன்ற னருள்தாராய்;

சலமறுகு பூளை தும்பை யணிசேயே —
சரவண பவா முகுந்தன் மருகோனே;

பலகலை சிவாக மங்கள் பயில்வோனே —
பழநிமலை வாழ வந்த பெருமாளே.

மா கா மா பா தா பா ; பா பா ; | மா பா தா பா | ; ; ப ம க ரி ||
உ ல க ப சு யா ச தொந் த ம து வா ன . . .

மா கா மா பா தா / நீ ; தா தா ; | பா மா பா மா | கா ப ம கரிசா ||
உ ற வு கி ளை தா யர் தந் தை ம னை பா . . . . . வர்

சா கா ரீ கா ரீ கா ; மா பா ; | பா தா பா ச்ா | ; ; ச்ா ; ||
ம ல ச ல சு வா ச ச ஞ் ச ல ம தா லென்

ச்ா க்ா ர்ீ க்ா ர்ீ ச்ா ; ச்ா / தா ; | பா ம ப த ப ச் நி | த ப ப ம க ம ரீ ||
ம தி நி லை கெ டா ம லுன் ற ன . ருள் . தா. . . ரா . . ய்

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## கொங்கணகிரி

ஸ்ரீ இராகம் :
தாளம் சதுஸ்ர ; திருபுடை ; கண்டகதி

ஆ. சரிமபநீச்
அ. ச்நிபமரிகாரிச

22-வது மேளத்திற் பிறந்தது

ஐங்கரனை யொத்தமன மைம்புல மகற்றிவள
ரந்திபக லற்ற நினை வருள்வாயே –

அம்புவி தனக்குள்வளர் செந்தமிழ் வழுத்தியுனை
அன்பொடு துதிக்க மன மருள்வாயே ;

தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திர வெளிக்கு வழி யருள்வாயே –

தண்டிகை கனப்பவுசு எண்டிசை மதிக்கவளர்
சம்ப்ரம விதத் துடனே யருள்வாயே ;

மங்கையர் சுகத்தைவெகு இங்கிதமெ னுற்றமன
முன்றனை நினைத்தமைய அருள்வாயே –

மண்டலிக ரப்பகலும் வந்தசுப ரக்ஷைபுரி
வந்தனைய புத்தியினை யருள்வாயே ;

கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுஉட லுற்றபொரு ளருள்வாயே —

குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கண கிரிக்குள்வளர் பெருமாளே.

காலப்பிரமாணம் ஐந்து மாத்திரை ஓர் களையாகக் கொண்டது.

ரீகரிச . சா ச ச ச . சா ச நிப நிசரி ச ரி | ரிமபபப . பதநிபம | ரிகரீ, சா ; , ||
ஐங்கரனை யொத்த மன மைம்புலம க . ற்றிவளர் அந்திபகல . ற்றநினை வருள்வாயே

ரிமபபபநீ ச் ச் ச் . ரீ க் ரி ச் சா ச் நிப | பத நிப ம பாபமரி | ரி க ரீ , சா ; , ||
அம்.புவிதனக்குள் வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை அன்பொடு துதிக்க மன மருள்வா யே

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## விராலிமலை

**இராகம்: பந்துவராளி** — ஆ. சரிகமபதநிச் — **51-வது மேளத்திற் பிறந்தது**

**தாளம், மிசிர: சாப்பு** — அ. ச்நிதபமதமகரிச

ஐந்து பூதமு மாறு சமயமு
மந்த்ர வேதபு ராண கலைகளும்
ஐம்ப தோர்வித மான லிபிகளும் வெகுரூப —

அண்ட ராதிச ராச ரமுமுயர்
புண்ட ரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானு நிலவொடு வெயில்காலும்;

சந்த்ர சூரியர் தாமு மசபையும்
விந்து நாதமு மேக வடிவம
தன்சொ ரூபம தாக வுறைவது சிவயோகம் —

தங்க ளாணவ மாயை கருமம
லங்கள் போயுப தேச குருப்ர
சம்ப்ர தாயமொ டேயு நெறியது பெறுவேனோ;

வந்த தானவர் சேனை கெடிபுக
இந்த்ர லோகம்வி பூதர் குடிபுக
மண்டு பூதப சாசு பசிகெட மயிடாரி —

வன்கண் வீரிபி டாரி ஹரஹர
சங்கரா என மேரு கிரிதலை
மண்டு தூளெழ வேலை யுருவிய வயலூரா;

வெந்த நீறணி வேணி யிருடிகள்
பந்த பாசவி கார பரவச
வென்றி யான சமாதி முறுகுகல் முழைகூடும் —

விண்டு மேல்மயி லாட இனியக
ளுண்டு காரளி பாட இதழிபொன்
விஞ்ச வீசுவி ராலி மலையுறை பெருமாளே.

; சா ரீ = கா ; கா மா | பா ; பா = பா/நீ தா பா ||
ஐந்து பூ த மு மா று ச ம ய மு
; கா மா = பா ; தா மா | பா ; தா = பா தா நீ ச்ா ||
மந்த்ர வே த பு ரா ண க லை க ளும்
; ச்ா ச்ா = ச்நி தா பா மா | தத பம கரி = கா ரீ சா சா ||
ஐம்ப தோர் . . வி த மா . . . ன . வி பி க ளும்
; சா ரீ = கா ; மா ; | பா ; ; . = கம பத பம கரி || சநி
வெ கு ரு . ப . . . . . . . . . .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருமலை

இராகம்: நாதநாமக்கிரியை — ஆ. சரிகமபதநீ — 15-வது மேளத்திற் பிறந்தது
தாளம்: ஆதி — அ. நிதபமகரிசநீச — 1. களைச் சவுக்கம்

ஒருபது மிருபது மறுபது முடனறு
முணர்வுற இருபத முளநாடி —

உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு வொளிபெற விரவாதே;

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே —

திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறஅருள் புரிவாயே;

பரிவுடனழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம் —

பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி யிளையோனே;

பெருமலை யுருவிட அடியவ ருருகிட
பிணிகெட அருள்தரு குமரேசா —

பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்
பிணையமர் திருமலை பெருமாளே.

; ச ரீ ம மா மா மா மா மா | மா மா மா மா | மா பா மா மா ||
ஒ ரு ப து மி ரு ப து ம று ப து மு ட ன று

; க மா ப தா பா தா மா பா | மா மா மக ரீ | மா கா மா ; ||
மு ணர் வு ற இ ரு ப த மு ள நா . . . . டி

; ம பா க மா பா பா பா பா | பா/தா பா/தா | மா பா மா மா ||
உ ரு கி ட மு மு ம தி த மு லெ ன வொ ளி தி கழ்

; க மா ப மா மக பம கரி சநி | சா ரீ மக ரீ | பம கரி சா ; ||
வெ ளி யொடு வொ . ளி . பெ . ற . வி ர வா . . . . . . தே

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# பழநி

**இராகம்: சக்கரவாகம்** — ஆ. சரிகமபதநிச் — **16-வது மேளம்**

**தாளம், சங்கீர்ண ஜெம்பை** — அ. ச்நிதபமகரிச

ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே –
 உனதுபழ நிமலையெனு மூரைச் செவித் தறியேனே;
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே –
 பிறவியற நினைகுவனெ ளுசைப் பாடைத் தவிரேனே;
துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே –
 **தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே;**
**விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே –**
 **விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே.**

இதன் தாளம் சங்கீர்ண ஜம்பையானாலும் ஷ தாளத்தை மேல் குறித்திருக்கும் கைத்தாளப்பிடி என்னும் அங்க தாளமாகப் போட்டுக்கொள்ளவும். ஷ அங்கதாளத்தின் காலப்பிரமாணம் 2 மாத்திரை ஓர் கலையாகக் கொண்டது.

○ ஒ ○ ஒ ○ ஒ உ

தா நீ சா நீ தா | பா தா நீ தா பா | மா ; | கா ரீ கா ரீ சா ரீ | கா மா | பா ; பா ; ||
ஒ ரு பொ ழு து மி ரு ச ர ண நே சத் . தே . வைத் து ண ரே னே

மா கா ரீ கா மா | பா பா பா பா பா |/நீ ; | தா ; நீ தா நீ பா | தா நீ | ச்ா ; ச்ா ; ||
உ ன து ப ழ நி ம லை யெ னு மூ ரைச் சே . வித் . த றி யே னே

இவ்வாறே எனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# பொது

இராகம்: சங்கராபரணம்
தாளம், மிசிர; ஏகம்

ஆ. ச ரி க ம ப த நி ச்
அ. ச் நி த ப ம க ரி ச

29-வது மேளம்

காதி மோதி வாதாடு நூல்கற் றிடுவாருங் –
காசு தேடி யீயாமல் வாழப் பெறுவோரும்;
மாது பாகர் வாழ்வே யெனநெக் குருகாரும் –
மாறி லாத மாகால னூர்புக் கலைவாரே;
நாத ரூப மாநாத ராகத் துறைவோனே –
நாக லோக மீரேழு பாருக் குரியோனே;
நீதி லாத வேல்வீர சேவற் கொடியோனே –
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே.

இதன் தாளம் மிசிர ஏகம். 3 ஆவர்த்தனம் கொண்டதாகும். இதனை மேல் குறித்திருக்கும் கைத்தாளப் பிடியென்னும் அங்க தாளமாகப் போடவேண்டும். இதன் காலப்பிரமாணம் இரண்டு மாத்திரை ஓர் கலையாகக் கொண்டது.

| 3 | 3 ○ ◡ ○ ○ ⊥

கா மா பா | பா மா கா | ரீ ; | மக | கரி சா | சா ; | சா ; தா நீ சா ; சா ; ||
கா . தி மோ . தி வா தா . . . டு நூல் கற் றி டு வா ருங்

சா ; சா | ரீ சா சா | சா ; | தா | பா பா | பா ; | மா ; கா மா பா ; பா ; ||
கா சு தே . டி யீ யா . மல் வா ழப் பெ று வோ ரும்

தப மக மா | பா ; பா | தா ; | நீ | ; ச்ா | சா ; | ச்ா ; தா நீ சா ரீ சா ; ||
மா . . . து பா கர் வாழ் வே . யெ ஞை நெக் கு ரு கா . ரும்

பா ; ச்ா | ச்நி தா பா | பா ; | ச்நி | தா பா | பா ; | மா ; கா மா கம பம பமகரி ||
மா றி லா . . த மா கா . . ல னூர் புக் க லை வா . . . ரே . . .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருவானைக்கா

இராகம்: இந்தளம்
தாளம், கண்ட ; ரூபகம்

ஆ. ச க ம த நி ச்
அ. ச் நி த ம க ச

20-வது மேளத்திற் பிறந்தது
I. களைச் சுவக்கம்

காவிப் பூவை யேவை யிகல்வன
நீலத் தால கால நிகர்வன
காதிப் போக மோக மருள்வன இருதோடார்-
காதிற் காதி மோதி யுழல்கண
மாயத் தார்கள் தேக பரிசன
காமக் ரோத லோப மதமிவை சிதையாத ;
பாவிக் காயு வாயு வலம்வர
லாலிப் பார்கள் போத கருமவு
பாயத் தான ஞான நெறிதனை யினிமேலன்-
பாலெக் காக யோக ஜெபதப
நேசித் தார வார பரிபுர
பாதத் தாளு மாறு திருவுள நினையாதோ ;
கூவிக் கோழி வாழி யெனமயி
லாலித் தால கால மெனவுயர்
கூளிச் சேனை வான மிசைதனில் விளையாடக்-

கோரத் திர சூர னுடைவினை
பாறச் சீற லேன பதிகனை
கோலக் கால மாக அமர்செய்த வடிவேலா;
ஆவிச் சேல்கள் பூக மடலிள
பாளைத் தாறு கூறு படவுய
ராலைச் சோலை மேலை வயலியி லுறைவோனே-
ஆசைத் தோகை மார்க ளிசையுட
னாடிப் பாடி நாடி வருதிரு
ஆனைக் காவில் மேவி யருளிய பெருமாளே.

1 நீ ; சா ; | கா ; கா மா ; மா மா மா மா மா ||
கா விப் பூ வை யே வை யி, கல் வ ன

.கா ; மா ; | தா ; நீ ச்ா ; ச்ா ச்ா ச்ா ச்ா ச்ா ||
நீ லத் தா ல கா ல நி கா் வ ன

க்ா ; ச்ா ; | ச்ா ; நீ நீ ; தா மா கா சா சா ||
கா திப் போ க மோ க ம ருள் வ ன

நீ சா மா ; | ; ; மா கா தா மா கா ; சா ; ||
இ ரு தோ டார் . . , , . ,

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருக்கற்குடி

இராகம் : புஷ்பலதிகா — ஆ. ச ரி க ம ப நி ச் — 22-வது மேளத்திற் பிறந்தது

தாளம், சதுஸ்ர ; திரிபுடை கண்டகதி — அ. ச் நி ப ம க ரி ச

குடத்தைத்த கர்த்துக் களிற்றைத்து ரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்-
குலத்தைக்கு மைத்துப் பகட்டிச் செருக்கிக்
குருத்தத்து வத்துத் தவர்சோரப் ;
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட்ட கச்சுத் தனமாதர்-
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற்றி ருக்கப்
புரித்துப்ப தத்தைத் தருவாயே ;
கடத்துப் புனத்துக் குறத்திக்கு மெத்தக்
கருத்திச்சை யுற்றுப் பரிவாகக்-
கனக்க ப்ரியப்பட் டகப்பட்டு மைக்கட்
கடைப்பட்டு நிற்கைக் குரியோனே ;
கடத்துற்ப வித்துச் சுவர்க்கத்த லத்தைத்
தழைப்பித்த கொற்றத் தனிவேலா-
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்குத்
தருக்கற் குடிக்குப் பெருமாளே.

காலப்பிரமாணம் ஐந்து மாத்திரை ஓர் களையாகக்கொண்டது.

; ; ச . சா சா ச . பா பா ம . பா பா ப | ச்ா ச்ா நி . ச்ா க்ா ரி | ச்ா ச்ா ப . நீ ச்ா , ||
கு டத்தைத்த கர்த்துக்க ளிற்றைத்து ரத் திக் கு வட்டை ச்செறுத்துக்க க சா

ச்ா ; நி . ச்ா ரீ ச் . நீ ச்ா நி . பா நீ ப | மா பா க . மா பா ம | கா ரீ ச . ரீ சா , || சா ;
லக் கு லத்தைக் குமைத் துப்ப . கட்டிச்செ ருக்கிக் குருத் துத் து வத்துத்தவர் சோ ரப்

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருவருணை

இராகம்: மோகனம்
தாளம், சதுச்ர; திருபுடை

ஆ. சரிகபதச்
அ. ச்தபகரிச

28-வது மேளத்திற் பிறந்தது
1. களைச் சவுக்கம்

குமர குருபர குணதர நிசிசர
திமிர தினகர சரவண பவகிரி
குமரி சுதபகி ரதிசுத சுரபதி குலமானுங்—

குறவர் சிறுமியை மருவிய திரள்புய
முருக சரணென வுருகுதல் சிறிதுமில்
கொடிய வினையனை யவலனை யசடனை யதிமோகக்;

கமரில் விழவிடு மழகுடை யரிவையர்
களவி னெடுபொரு ளளவள வருளிய
கலவி யளறிடை துவளுறும் வெளிறனை யினிதாளக்—

கருணை யடியரொ டருணையி லொருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே;

குமர மிகுதிரை யெறிவளை கடல்குடல்
மறுகி யலைபட விடநதி யுமிழ்வன
சமுக முககண பணபணி பதிநெடு வடமாகச்—

சகல வுலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தரவெகு கரமலர்
தளர வினியதொ ரமுதினை யொருதனி கடையாநின்;

றமரர் பசிகெட வுதவிய க்ருபைமுகில்
அகில புவனமு மளவிடு குறியவன்
அளவு நெடியவ் னளவிட அரியவன் மருகோனே-

அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே.

; சா ரீ கா கா கா கா கா | பா\கா கா கா | கா கா கா கா ||
கு ம ர கு ரு ப ர கு ண த ர நி சி ச ர

; ரீ கா பா தா ச்ா ச்ா ச்ா | ச்ா\தா தா பா | பா\கா கா ரீ ||
தி மி ர தி ன க ர ச ர வ ண ப வ கி ரி

; சா ரீ கா/தா பா பா கா | கா ரீ ரீ சா | சா\தா தா பா ||
கு ம ரி சு த ப கி ர தி சு த சு ர ப தி

; தா சா ரீ கா ;/த ப பா |\ரீ ; சா ; | ; ச ரி க ப க ரி ||
கு ல . மா . . . ஹுங் . . . . . . .

சத ||
. . ||

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருவேரகம்

இராகம்: கரஹரப்ரியா — ஆ. சரிகாமபதநீச் — 22-வது மேளம்
தாளம், மிசிரஜெம்பை — அ. ச்நீதபமகாரிச — 1. கண்டச்சவுக்கம்

குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனந வுரையுதவு மயிலா எனத்தினமு — முருகாதே-
குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலந வரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்க ளுடைமைமன முடனே பறிப்பவர்க — ளணைவோரும்;
தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண் — வலையாலே-
சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமாத ரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்தஅருள் — தருவாயே;
சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள ரணதூள் படுத்திவிடு — செருமீதே-
தவனமொடு மலகைநட மிடவீர பத்திரர்க
ளதிரநிண மொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள் — பலகோடி;

திமிதமிட நரிகொடிகள் கழுகா டாத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரஅமரர் பதிவாழ்வு பெற்றுலவு முருகோனே-

திருமருவு புயனயனொ டயிரா வதக்குரிசி
லடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவே ரகத்திலுறை பெருமாளே.

தா நீ ச்ா ச்ா ச்ா ச்ா நீ ச்ா நீ தா தா தா தா ; | பதநிச் | நித பா பா பா ||
கு ம ர கு ரு ப ர மு ரு க கு க னே கு . ற . . . ச்சி று மி

மா பா தா நீ ச்ா ச்ா நீ நீ தா பா மா பா பமகா | ரீ கா | ; மா பா பா ||
க ண வ ச ர வ ண நி ரு தர் க ல கா . . பி றைச் ச டை யர்

பா தா நீ தா பா பததபபமகா கா ரீ பம பம கா | ரீ / பம | \கா ரீ ரீ சா ||
கு ரு வெ ன ந லு . ரை . யு . த வு ம யி . லா . எ ன . . த் தின மு

நீ சா ரீ ; ; ; கா ; ரிகமபத நி ச்ா ; ; | ரிச்நித | பம பமகரிசா ||
மு ரு கா . . . . , . . . . . . . . . . தே . . . .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருத்தணி

இராகம்: மத்தியமாவதி — ஆ. ச ரி ம ப நி ச் — 22-வது மேளத்திற் பிறந்தது

தாளம், சதுச்ர, திருபுடை, கண்டகதி — அ. ச் நி ப ம ரி ச

கூர்வேல் பழித்தவிழி யாலே மருட்டிமுலைக்
கோடா லழைத்து மல ரணைமீதே—
கோபா விதழ்ப்பருக மார்போடணைத்துகலை
கோல்போல் சுழற்றி யிடை யுடைநாணக்;
கார்போல் குழற்சரிய வேவாய நட்டியிரு
காதோலை யிற்று விழ விளையாடுங்—
காமா மயக்கியர்க ளூடே களித்துநம
கானா ருறைக்கலக மொழியாதோ;
வீராணம் வெற்றிமுர சோடே தவிற்றிமிலை
வேதாகமத் தொலிகள் கடல்போல—
வீருய் முழக்கவரு சூரா ரிறக்கவிடும்
வேலா திருத்தணியி லுறைவோனே;
மாரோ னிறக்கநகை தாதா திருச்செவியில்
மாபோ தகத்தை யருள் குருநாதா—
மாலோ னளித்தவளி யார்மால் களிப்பவெகு
மாலோ டணைத்து மகிழ் பெருமாளே.

காலப்பிரமாணம் ஐந்து மாத்திரை ஓர் களையாகக்கொண்டது.

ரீ பா ம . ரீ ம ரி ச . சா ரீ ச . நீ நி ப ப | பா சா ச சா ம ரி ச | ச நி ரி சா , ரீ ; , ||

கூர்வேல்ப ழி த்த வி ழி யா லே ம ருட்டி மு லைக் கோ ட்டா லழைத்து ம ல ர ணை மீ . தே

ரி ம பா ப . பா நி ம ப . பநி ச்ா ச் . ச்ா ச் ச் ச் | ச் நி ரீ ச் . ச்நி நிப ப | ப ம நிப ம . ரி ம ம ரி ச ||

கோ . பாவி தழ் ப் ப ரு க மார்போட ணைத்துகணை கோல்போல் சு . ழற்றியிடை யு . டை . . நா . ண . .

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

# திருச்செந்தில்

இராகம்: கரஹரப்ரியா — ஆ. சரிகாமபதநீச் — 22-வது மேளம்

தாளம், சங்கீர்ண ; திருபுடை — அ. ச்நீதபமகாரிச

கொம்பனை யார்காது மோதிரு
கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு-
கொங்கையி னீராவி மேல்வளர்
செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி லாதார சோலையில் மருளாதே;

உம்பர்கள் சாமீ நமோநம
எம்பெரு மானே நமோநம
ஒண்டொடி மோகா நமோ நம எனநாளும்-
உன்புக ழேபாடி நானினி
அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே;

பம்பர மேபோல ஆடிய
சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி-
பங்கமி லாநீலி மோடிப
யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்;

டெம்புதல் வாவாழி வாழியெ
　　னும்படி வீருன வேல்கர
　　என்றுமு ளானேம னேகர　　　வயலூரா—
இன்சொல்வி சாகாக்ரு பாகர
　　செந்திலில் வாழ்வாகியே யடி
　　யென்றனை யீடேற வாழ்வருள்　　　பெருமாளே.

சங்கீர்ண திருபுடை இரண்டு மாத்திரை ஒரு களையாகக்கொண்ட காலப்பிரமாணம்.

கா ; கா மா பா ; பா ; பா | பா ; | பா பா ||
கொம் ப னை யார் கா து மோ தி ரு

பா ; தா நீ ச்ா ; நீ நீ தா | நீ தா | பா பா ||
க ண் க ளி லா மோ . த சீ . த ள

கா ; கா மா பா தா நீ தா பா | பம கா | ரீ சா ||
குங். கு ம பா . டீ . ர பூ . . ஷ ண

நீ சா ரீ ; கா ; ; கபமக | ரிமகரி | சா ; ||
ந கை மே . . . . . . . . . . வும்

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## பெரும்பற்றப்புலியூர்

**இராகம் : யமுனா கல்யாணி** — ஆ. ச ரி க ப ம ப த ச் — **65-வது மேளத்திற் பிறந்தது**

**தாளம், மிசிர : ரூபகம்** — அ. ச் த ப ம ப க ரி ச

சாந்துட னேபுழுகு தோய்ந்தழ கார்குழலை
  மோந்துப யோதரம  தணையாகச் –
சாய்ந்துப்ர தாபமுடன் வாழ்ந்தநு ராகசுக
  காந்தமொ டூசியென  மடவார்பால் ;

கூர்ந்தக்ரு பாமனது போந்துன தாள்குறுகி
  ஓர்ந்துண ராவுணர்வி  லடிநாயேன் –
கூம்பவிழ் கோகனக பூம்பத கோதிலிணை
  பூண்டுற வாடுதின  முளதோதான் ;

பாற்களின் மீதினிதி னேங்குக ணேதுயில்கொள்
  நீண்டிடு மாலொடய  னறியாது –
பாம்புரு வானமுனி வாம்புலி யானபதன்
  ஏய்ந்தெதிர் காணநட  மிடுபாதர் ;

பூந்துணர் பாதிமதி வேய்ந்தச டாமகுட
  மாங்கன காபுரியி  லமர்வாழ்வே –
பூங்கமு கார்வுசெறி யூங்கன காபுரிசை
  சூழ்ம்புலி யூரிலுறை  பெருமாளே.

மிசிர ரூபகதாளத்தின் காலப்பிரமாணம் இரண்டு மாத்திரை ஓர் களையாகக்கொண்டது.

; தா | , சரீ க்ர ; பமகரிகா || ; பா | , பபா பமதாபமகாரீ ||
சாந் துடனே . . மு . கு தோய் ந்தழ கா . ர் கு . ழலே
; கா | , / தபாபம காரீசாசா || ; சத | சரிகா ; மப கரிகரி சா ||
மோ ந்து பயோ . . தரம தணையா . . கச் , . . . . .

; கா | , பமாபா ; பாபாபா || ; மப | , ததாதா ; தா தா பா ||
சாய் ந்துப்ரதா பமுடன் வாழ் . ந்தநு ரா க சு க
; ச்ரா | , ச்ச்ரா \ தா ; தாதாபா || ; கரி | கமபத பமகரி கரிகரிசா ||
காந் தமொழீ சியென மட வார் . . . பா . . . . . . ல்

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## பொது

**இராகம்:** சாமா  
**தாளம்,** கண்ட சாப்பு

28-வது மேளத்திற் பிறந்தது

ஆ. சரிமபதச்  
அ. ச்தபமகரிச

சிவஞான புண்டரிக மலர்மாது டன்கலவி  
சிவபோக மன்பருக அறியாமற் –  
செகமீது மூன்றுமல வடிவாயி ருந்துபொது  
திகழ்மாதர் பின் செருமி யழிவேனோ;  
தவமா தவங்கள்பயில் அடியார் கணங்களொடு  
தயவாய் மகிழ்ந்து தினம் விளையாடத் –  
தமியேன் மலங்களிரு வினைநோயி டிந்தலற  
ததிநாளும் வந்ததென் முன் வரவேணும்;  
உவகாரி யன்பர்பணி கலியாணி யெந்தையிட  
முறைநாய கங்கவுரி சிவகாமி –  
ஒளிராளையின் கரமில் மகிழ்மாது ளங்கனியை  
யொருநாள் பகிர்ந்தவுமை யருள்பாலா;  
அவமே பிறந்தளனை யிரவாம லன்பர்புகு  
மழுதால யம்பதவி யருள்வோனே –  
அழகா நகம்பொலியு மயிலா குறிஞ்சிமகிழ்  
அயிலா புகழ்ந்தவர்கள் பெருமாளே.

; த ச் =\தா ; பா | த ப ப ம = ம க கரி ரீ ||
சி வ ஞா ன பு ண் . . ட . ரி . க

; ச ரி =\தா ; தா | சா ; = சா சா சா ||
ம லர் மா து டன் க ல வி

; ச ரி =/மா ; பா | தா ; = தா தா பா ||
சி வ போ க மன் ப ரு க

; ப த = த ப ம பா த | ச்ா ; = ; ; ; ||
அறி யா . . . . மல்

இவ்வாறே ஏனைய அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## திருவாவிநன்குடி

இராகம் : அம்சநாதம்　　ஆ. சரிமபநிச்　　59-வது மேளத்திற் பிறந்தது
தாளம், கண்ட சாப்பு　　அ. ச்நிபமரிச

சிவனார் மனங்குளிர உபதேச மந்த்ரமிரு
　செவிமீதி லும்பகர்செய் குருநாதா —
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
　செயலே விரும்பி யுளம் நினையாமல் ;
அவமாயை கொண்டுலகில் விருதா வலைந்துழலும்
　அடியேனை அஞ்சலென வரவேணும் —
அறிவாகமும் பெருக இடரானதுந் தொலைய
　அருள்ஞான இன்பமது புரிவாயே ;
நவநீதமுந் திருடி உரலோடெ யொன்றுமரி
　ரகுராமர் சிந்தை மகிழ் மருகோனே —
நவலோகமுங் கைதொழு நிசதேவ லங்கிருத
　நலமான விஞ்சை கரு விளைகோவே ;
தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
　திறல்வீர மிஞ்சு கதிர் வடிவேலா —
திருவாவி நன்குடியில் வருவேள் சவுந்தரிக
　செகமேல் மெய்கண்ட விறல் பெருமாளே.

; ப ப = பா ; ப ம | ரீ ; = ரீ ரீ சா ||
சி வ ஞர் ம . னங் கு ளி ர

; ச ரி = நீ ; சா | ரீ ; = ரீ ரீ ரீ ||
உ ப தே ச மந் த்ர மி ரு

; ச ரி = மா ; மா | பா ; = பா பா பா ||
செ வி மீ தி லும் ப கர் செய்

பா பா = பம ரிம ரி ரி | சா ; = ; ; ; ||
கு ரு நா . . . . . தா . . .

; ப ப = பா ; பா | நீ ; = நீ நீ நீ ||
சி வ கா ம சுந் த ரி தன்

; நி நி = ச்ா ; ச்ா | ரீ ; = ரீ ரீ ச்ா ||
வ ர பா ல கந் த நி ன

; ச் ச் = ச் நி ரி ச் நி ப | பா ; = பா ப ம ரீ ||
செ ய லே . . . வி . ரும் பி யு . ளம்

சா ரீ = ச ரி ம ப நி ச் | ச்நி பா = ப ம ரி ம ரி ச ||
நி னே யா . . . . . . . . மல் . . . . .

இவ்வாறே பின்வரும் அடிகளையும் பாடிக்கொள்ளவும்.

## பழமுதிர்சோலை

இராகம்: நளினகாந்தி — ஆ. ச க ரி ம ப நி ச் — 29-வது மேளத்திற் பிறந்தது

தாளம், கண்ட திருபுடை — அ. ச் நி ப ம க ரி ச — 1. களைச் சவுக்கம்

சீர்சி றக்கு மேனி பசேல் பசே லென
நூபுரத்தி ஞேசை கலீர் கலீ ரென
சேர விட்ட தாள்கள் சிவேல் சிவே லென — வருமானர் —

சேக ரத்தின் வாலை சிலோர் சிலோர் களும்
நூறு லக்ஷ கோடி மயால் மயால் கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோ வென — மடமாதர்;

மார்ப டைத்த கோடு பளீர் பளீ ரென
ஏம லித்தெ ஞவி பகீர் பகீ ரென
மாம சக்கி லாசை யுளோ முளோ மென — நினைவோடி —

வாடை பற்று வேளை அடா அடா என
நீம யக்க மேது சொலாய் சொலா யென
வாரம் வைத்த பாத மிதோ இதோ என — அருள்வாயே;

பார தத்தை மேரு வெளீ வெளீ திகழ்
கோடொ டித்த நாளில் வரைஇ வரைஇ பவர்
பானி றக்க ணேசர் குவா குவா கனர் — இளையோனே —

